உ

ஸ்ரீகணேசாயநம:

# முகவுரை.

இக்கலியில் சகல ஜீவர்களும் மிகத்துன்ப முடையவர்களாயிருத்தலால் எல்லோருக்கும் தம்முடைய துன்பம் நீங்கிவிடவேண்டு மென்னும் விருப்ப முண்டாகின்றது. ஆனால் சம்ஸார துக்கம் மந்திரௌஷதிமுதலியவற்றால் ஒருகணம் நாழிகை மாசம் வருஷ மென்றல்முதலியனவாக நியமிக்கப்பட்ட காலம் வரையில் நீங்குகிறது. மீண்டும் வாராதபடி அத்தியந்தமாய் நீங்குகிறதில்லை. ஏனெனின் "तमेव विदित्वाऽतिमृत्युमेति नान्यः पन्था विद्यतेऽयनाय ॥ அந்தப் பிரஹ்மத்தினையே அறிந்து மிருத்தியுவைக் கடக்கின்றான். அதனைக் கடத்தற்கு வேறுவழியில்லை." என்னும் யஜுர்வேதம் ஞானமே மோக்ஷமார்க்கமென்று கூறுகின்றது. ஆதலால் உலகினர் தம் துக்க மொழிதற்பொருட்டு அவ்வுண்மைஞானத்தினை யுணருமாறு பரமகருணாநிதியாகிய பரமேசுவரன் இப்பூமியில் அவதரித்து ஸ்ரீ சங்கராசாரிய ரென்னும் காரணப்பெயரையே தமக்குப் பெயராகக் கொண்டு பிரஹ்மசூத்திரபாஷியாதி அநேக நூல்களைச் செய்து வேதத்தின் உண்மைப்பொருளை வெளிப்படுத்தினார். ஆனால் அவ்வாறு தாம் செய்த விரிந்த வேதாந்தநூல்களைப் பார்க்கச் சக்தியில்லாத மந்தமதியினராகிய ஆஸ்திகர்கள் எளிதிலுணருமாறு அபரோக்ஷாநுபூதி, ஆத்மபோதமுதலிய அநேகப் பிரகரணகிரந்தங்களை இயற்றியருளினர். அவையாவும் வியாக்கியானங்களுடன் ஆரியபாஷையி லிருத்தலால் அப்பாஷையைப் பயிலுதலில்லாத தமிழ்நாட்டு ஆஸ்திகர்களாகிய அதிகாரிகளும் அறிந்துய்யுமாறு அந்நூல்களை அவ்வாசாரியர்களது திருவாக்காகிய மூலசுலோகங்களுடன் தெளிவான ஓர் தமிழுரையும்சேர்த்துவெளியிட வேண்டு மென்று பலர் கேட்டுக்கொண்டமையால் அந்நூல்கள் "ஸ்ரீசங்கரகிரந்தாவலி" யென்னும் பெயரால் பதிப்பிக்கப்பட்டு வருகின்றன. அவற்றுள் அபரோக்ஷாநுபூதி முதற்புத்தகமாக முன்னரே பதிப்பிக்கப்பட்டுளது. இப்போது ஷ

கிரந்தாவலியின் இரண்டாம் புத்தகமாக ஆத்மபோதமும், தத்வ போதமும் தஞ்சைமாநகரம ஸ்ரீமாந் வெ. குப்புஸ்வாமிராஜு அவர்களால் செய்யப்பட்ட வுரையுடன் வெளிப்படுத்தப்பட் டது. அவற்றுள், ஆத்மபோதம் ௬௰ சுலோகங்களடங்கிய எளிதான சுலோகவடிவினது. இதன் ஒவ்வொரு சுலோகமும் ஒவ்வொரு திருஷ்டாந்தபூர்வமாக மந்தப்பிரஞ்ஞையுடைய முமுக்ஷுக்களுக்கு வேதாந்தப்பிரக்கிரியைகளை வெளிப்படை யாய்ப் போதிப்பனவாம். இதன் பாடபேதங்கள் பல வுளவாயி னும் அவற்றை யெல்லாம் விலக்கி எப்பாடத்தைக்கொண்டு ஸ்ரீ பஞ்சதசியின் சம்ஸ்கிருதவியாக்கியானகர்த்தாவாகிய ஸ்ரீ ராம கிருஷ்ணபண்டிதர் இதற்கு வியாக்கியானம் செய்திருக்கின் னரோ! அப்பாடத்தையும் அவ்வியாக்கியானத்தையும் தழுவியே இங்குத் தமிழுரையும் குறிப்புரையும் எழுதப்பட்டமையால் அப் பாடமே இந்நூலிலும் வைக்கப்பட்டுள்ளது. இந்நூல் எல்லாவற் றினும் எளிதாம். இதுவும் கடின மென்று எவ்வதிகாரிகளுக்குத் தோற்றுகிறதோ, அவர்கள்பேரில் கருணை கூர்ந்து ஸ்ரீமத் ஆசா ரியர்கள் தத்துவபோத மென்னும் வசனவடிவ வினவிடையான ஓர் சிறு நூலை யியற்றியருளினர். அதுவும் இத்தமிழ்நாட்டு முமு க்ஷுக்களுக்கு அத்தியந்த முபயோக முள்ளதெனக் கருதி ஷெ மூலவாக்கியங்களுக்கு வினவிடையான தமிழ் மொழிபெயர்ப்பும் குறிப்புரையும் ஸ்ரீமாந் வெ. குப்புஸ்வாமிராஜு அவர்களாலே யே இயற்றப்பட்டுள்ளது. இதில் முதல் முதல் வேதாந்தப்பிரக் கிரியை தெரிய விரும்புவோர் எளிதா யறியும்படி, தத்துவங்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறு இவ்விரண்டு நூல்களும் மிகவுபகாரமுள்ளனவா யிருத்தல்பற்றி அவற்றை மூலத்துடன் தமிழ்வியாக்கியான மொழிபெயர்ப்புகளையும் சேர்த்து, சங்கர கிரந்தாவலியின் இரண்டாம்புத்தகமாக வெளியிடலானோம். இதில் உள்ள குற்றங்களைப் பெரியோர் மன்னிப்பாராக.

வி. கோவிந்தன் அண்டு பிரதர்ஸ்,

தஞ்சை.

10-2

உ

விநாயகஸ்துதி.

ஏக தந்த னிணையடி தொழுவார்க்
கேகா வினையு மெளிதினிற் கெடுமே.

சரஸ்வதிஸ்துதி.

பூவினி லுறைவதல்லாற் புங்கவர் போற்று நாபிப்
பூவினி லுறைவோன் வேதம் புகலுதற் கென்றே யன்ன
வினி லுறையும் வாணி நாமமே நவிற்று வென்புன்
னுவினி லுறைந்து ஞான நன்மொழி புகலு வாயே.

ஆசார்யஸ்துதி.

நங்குரு சங்க ராசான் னரரொலா முய்யும் வண்ண
மிங்கொரு மனித வேட மெடுத்துமெய் யபேதந் தன்னைப்
பங்கம தில்லா தாகப் பகர்ந்திடா னுயின் மற்றோர்
வங்கமி லாழ்ந்த சன்ம வன்கட னீந்தற் பாற்றோ.

ஸ்ரீ கணேசாய நம:

# ஆத்மபோதம்.

तपोभिः क्षीणपापानां शांतानां वीतरागिणाम् ।
मुमुक्षूणामपेक्ष्योयमात्मबोधो विधीयते ॥ १ ॥

(அவதாரிகை.)

சகலலோகபூஜ்ஜியரான ஸ்ரீ சங்கராசாரியசுவாமிகள் சமத மாதியுடையவர்களாகிய உத்தம அதிகாரிகளுக்குச் சூத்திரபா ஷியம், உபநிஷத்பாஷியம், கீதாபாஷ்ய மென்னும் மூன்று *க. பிரஸ்தானங்களையுஞ் செய்து, பின்னர் இம்மூன்றனையும் அவற் றின் வியாக்கியானமுதலியனவாகிய விரிந்த நூல்களையு மாராய் ந்து தாற்பரியநிச்சயஞ் செய்துகொள்ளும் சாமர்த்தியமின்றிய மகாமுமுக்ஷுக்களான மந்தாதிகாரிகளை இரக்ஷித்தற்கு, சர்வ வேதாந்தசித்தாந்தசங்கிரகவடிவமான ஆத்மபோத மென்னும் பிரகரணத்தை வெளிப்படையாய் விளக்கும்பொருட்டுப் பிரதிஞ் ஞை செய்கின்றார்:—

तपोभिः क्षीणपापानां शांतानां वीतरागिणां मुमुक्षूणां अपेक्ष्य अयं आत्मबोधः विधीयते ॥

(சுலோகார்த்தம்.) தவசுகளால் பாபம் நசித்தவர்களும், சாந் தர்களும் இராக மொழிந்தவர்களுமாகிய முமுக்ஷுக்களை அபே க்ஷித்து இவ்வாத்மபோதம் விதிக்கப்படுகின்றது.

(வியாக்கியானம்.) *உ. கிருச்சிர சாந்திராயண நித்திய

---

*க. பிரஸ்தானம் = அங்கம்.

*உ. பன்னிரண்டுதினங்களாற் சாதிக்கப்படும் விரதம் யாதோ அது கிருச்சிர மெனப்படும். அது பாதக்கிருச்சிராதி பேதத்தால் பன்னிரண்டு வகையாம்.

சந்திரனது கலை குறைதற்கிரமமாக ஒவ்வொரு கவளங் குறைத்து, அமாவாசையில் உபவாசமிருந்து, மீண்டும் கவளத்தைக் கலையின்படி விருத் திசெய்யும் விரதம் சாந்திராயண மெனப்படும்.

நைமித்திகாதிகளை அநுஷ்டித்தலாகிய தபசுகளால் ராகாதி அந்தக்கரணதோஷமாகிய பாபம் நசித்தவர்களும், இதயக்கலக்கமின்றிய சாந்தர்களும், இகபரசுக இச்சை நீங்கியவர்களும், சம்சாரக்கிரந்தியைப் பேதித்தலில் பிரயத்தினமுள்ள மோக்ஷ இச்சையுடையவர்களும், * ந. சாதனசதுஷ்டயசம்பன்னர்களுமாகிய சற்புருடர்களுக்கு ஆத்மாவைத் தெரிவிக்கும் இவ்வாத்மபோதப்பிரகரணம் விதிக்கப்படுகின்றது. (க)

बोधोन्यसाधनेभ्यो हि साक्षान्मोक्षैकसाधनम् ।
पाकस्य वह्निवज्ज्ञानं विना मोक्षो न सिध्यति ॥ २ ॥

(அ-கை.) அப்படியானால் தபசு, யோகம், மந்திரம், கர்மம், யாகமுதலிய அநேக சாதனங்களிருக்க மோக்ஷத்திற்குப் போத (ஞான)த்தையே முக்கிய சாதனமாகச் சொல்லுவதென்னையெனக் கூறுகின்றார் :—

अन्यसाधनेभ्यः बोधः हि साक्षात् मोक्षैकसाधनं ॥

(சு-ம்.) மற்றச் சாதனங்களெல்லாவற்றையும் விட ஞானமே மோக்ஷத்திற்கு முக்கியமான நேர் சாதனமாம்.

(வி-ம்) * ச. தபசு மந்திரம் கர்மம் யோகமுதலிய அநேக சாதனங்கள் பரம்பரைக்கிரமத்தால் ஞானவாயிலாக மோக்ஷத்தைப் பெறுவிக்கின்றன. ஞானமோ தான் பிறந்தமாத்திரத்

இவற்றின் பேதங்களை விரிவாய் அறியவிரும்புவோர் எம்மால் எழுதப்பட்டுள்ள பஞ்சதசியின் ஆத்மாநந்தப்பிரகரணம் சஎ-வது சுலோகத்தின் டிப்பணியிற் காண்க.

* ந. (க) நித்தியாநித்தியவஸ்துவிவேகம், (உ) இகலோகபரலோகபோகங்களி லிச்சையின்மை, (ந) சமாதி ஆறனடைவு, (ச) முமுக்ஷுத்துவ மென்னும் நான்கு சாதனங்களையுடையவன் சாதனசதுஷ்டயசம்பன்ன னெனப்படுவன்.

* ச. தபசுமுதலியன சித்தசுத்தியைத் தந்து ஞானவாயிலாக மோக்ஷத்திற்குக் காரணமாம். ஆதலால் அவை மோக்ஷத்திற்குப் பரம்பரைச்சாதனமாம் ; நேர்சாதன மாகா.

திலேயே அஞ்ஞானத்தை அடியோடு கெடுத்து முமுக்ஷுவை சுவராஜ்யத்தில் அபிஷேகஞ் செய்விக்கின்றது. ஆதலால் மற்றச் சாதனங்களைவிட ஞானத்திற்குப் பிரதானத்தன்மை சொல்லப்பட்டது.

(அ-கை.) அதனையே திருஷ்டாந்தத்தினால் திடமாக்குகின்றார் :—

पाकस्य वह्निवत् ज्ञानं विना मोक्षः न सिध्यति ॥

(சு-ம்) பாகத்திற்கு நெருப்பினைப்போல ஞான மின்றி மோக்ஷம் சித்தியாது.

(வி-ம்.) உலகத்தில் சமையற்றொழிலில் விறகு நீர்முதலிய சாதனங்களிருந்தும் அக்கினியின்றிப் பாகம் சித்திக்கிறதில்லை. அதுபோல எல்லாச் சாதனங்களு மிருந்தும் ஞானமின்றி மோக்ஷம் சித்திக்கிற தில்லை யென்பது பொருள். (உ)

अविरोधितया कर्म नाविद्यां विनिवर्तयेत् ।
विद्याऽविद्यां निहंत्येव तेजस्तिमिरसंघवत् ॥ ३ ॥

(அ-கை.) கர்மங்களுக்கு விசித்திரகதியை யுண்டுபண்ணுந்தன்மை யிருத்தலால் யாதேனும் ஓர் விசேஷகர்மம் அஞ்ஞானத்தை நிவிருத்தி செய்யின், ஆத்மஞானத்தா லாவ தென்னையென் றாசங்கித்து, கர்மத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் விரோதமின்மையால் கர்மம் அவ்வாறு நிவிருத்தி செய்யா தென்று சமாதானஞ் செய்கின்றார் :—

कर्म अविरोधितया अविद्यां न विनिवर्तयेत् । तेजः तिमिरसंघवत् विद्या अविद्यां निहन्ति एव ॥

(சு-ம்) யாகஞ்செய்தல்முதலிய கர்மங்கள் அவித்தைக்கு விரோதியாகாமையால் * டு. அவித்தையைக் கெடுக்கமாட்டா.

---

*டு. சேற்றினைச் சேறு கழுவமாட்டாது. அதுபோல அவித்தையின் காரியமாகிய கர்மம் அவித்தையினைக் கெடுக்கா தென்பது கருத்து.

திபாதிப்பிரகாசங்கள் இருட்கூட்டத்தினைக் கெடுப்பதுபோல வித்தையே அவித்தையைக் கெடுக்கவல்லதாம். (௩)

परिच्छिन्न इवाज्ञानात्तन्नाशे सति केवलः ।
स्वयं प्रकाशते ह्यात्मा मेघापायेंशुमानिव ॥ ४ ॥

(அ-கை.) அப்படியானல் ஆத்மா சரீரங்கடோறும் பரிச்சின்னமாகவே காணப்படுவதாக ஏகத்துவம் எப்படிக் கூடுமென்ருசங்கிக்கக் கூறுகின்ருர் :—

आत्मा अज्ञानात् परिच्छिन्नः इव प्रकाशते। तन्नाशे सति मेघापाये अंशुमान् इव केवलः स्वयं प्रकाशते ॥

(சு-ம்) * ௬. பிரத்தியகாத்மா * ௭. மூலாஞ்ஞானத்தினல் * ௮. பரிச்சின்னம்போல் விளங்குகின்றது. விசாரஞானத்தினல் அவ்வஞ்ஞானம் நசித்தபோது * ௯. மேகாவரணம் நீங்கிய சூரியன்போலக் கேவலம் தானகவே விளங்குகின்றது.

(வி-ம்) பரிபூர்ணமும் அத்விதீயமுமாகிய ஆத்மாவிற்கு அஞ்ஞானத்தினல் கற்பிக்கப்பட்ட நாநாவித சரீராத்தியாசத்தினலாகியதே பரிச்சின்னத்தன்மை ; தத்துவதிருஷ்டியினலாகியதன்று. அதனல் அவிவேகம் கெடவே ஆத்மா கேவலமாகவே (தனியாகவே) பிரகாசிக்கின்றது. மேகம் நீங்கியபோது சூரியனைப்போல என்பது பொருள். (௪)

अज्ञानकलुषं जीवं ज्ञानाभ्यासाद्धि निर्मलम् ।
कृत्वा ज्ञानं स्वयं नश्येज्जलं कतकरेणुवत् ॥ ५ ॥

(அ-கை) அகண்டாகாரவிருத்தியாகிய விசாரஞான மிருக்

---

* ௬. பிரத்தியகாத்மா = அந்தராத்மா.

* ௭. சொரூபத்தை மறைக்கும் அஞ்ஞானம் மூலாஞ்ஞான மெனப்படும்.

* ௮. தேசகாலவஸ்துக்களால் எல்லைப்படுத்தப்பட்டது பரிச்சின்னம்.

* ௯. மேகாவரணம் = மேகமூடல்.

கும்போது ஞாதிரு ஞானம் ஞேய மென்னும் *கo. திரிபுடிவடிவத்துவைதம் சித்தித்தலால் ஆத்மாவிற்கு அத்வைதம் சித்தித்தல் கூடாதெனக் கூறுகின்றார் :—

ज्ञानं अज्ञानकलुषं जीवं ज्ञानाभ्यासात् विनिर्मलम् कृत्वा जलं कतकरेणुवत् स्वयं नश्येत् ॥

(சு-ம்) விருத்திஞானமானது அஞ்ஞானத்தால் கலக்கப்பட்ட ஜீவனை ஞானப்பியாசத்தால் நிர்மலமாக்கி ஜலத்தைத் தேற்றும்பொடி தெளிவித்துக் கெடுவதுபோலத் தானும் கெடும்.

(வி-ம்) *கக. அகண்டாகாரவிருத்திஞானமானது அஞ்ஞானகாரியவடிவ யானென்பது முதலியவற்றால் கலக்கப்பட்டவனும், *கஉ. கர்த்திருத்துவ போக்திருத்துவாதி அபிமானமுடையவனுமாகிய ஜீவனை ஞானியாக்க, அதன் நீண்டகால அப்பியாசத்தினால் அவித்தையும் தற்காரியமுமாகிய மலத்தை விசேஷமாகக் கெடுத்து, மலமில்லாதவனுக்கிக் கலங்கின ஜலத்தைத் தேற்றும்பொடி தெளிவித்துத் தானும் அக்கலங்கலோடு கெடுதல்போலத் தானும் கெடுகின்றது. புத்திவிருத்தி அஞ்ஞானகாரியமா யிருத்தலால் அதிற் பிரதிபிம்பித்துள்ள ஞானம் ஆத்மாவின் ஆபாஸமாதலால் ஆத்மாவிலேயே ஒன்றாய்விடுகின்றது. அப்போது அத்வயமாகவே ஆத்மா பிரகாசிக்கின்றது என்பது பொருள். (ரு)

संसारः स्वप्नतुल्यो हि रागद्वेषादिसंकुलः ।
स्वकाले सत्यवद्भाति प्रबोधे सत्यवद्भवेत् ॥ ६ ॥

---

*கo. அறிபவன், அறிவு, அறியப்படுபொருளென்னும் மூன்று புடங்களை அதாவது பக்ஷ (புற)ங்களையுடையது திரிபுடி யெனப்படும்.

*கக. கண்டிக்கப்படாத பிரஹ்மவடிவ அந்தக்கரணவிருத்தி (உள்ள நிகழ்ச்சி) அகண்டாகாரவிருத்திஞான மெனப்படும். அதுவே அகம்பிரஹ்மாஸ்மி (யான் பிரஹ்மம்) என்னும் விருத்தியாகிய ஞானமாம்.

*கஉ. யான் செய்கிறவ னெனுந்தன்மை கர்த்திருத்துவம். யான் அநுபவிக்கிறவ னெனுந்தன்மை போக்திருத்துவம்.

(அ-கை.) அப்படியானல் அபரோக்ஷமாய் அநுபவிக்கப் படும் சம்சாரம் அத்தியந்தம் அசத்தியமா மென்பது எவ்வாறு கூடும் பிரத்தியக்ஷவிரோத மாதலால் என்ருசங்கித்து, சொப்பன திருஷ்டாந்தத்தினல் அதன் மித்தியாத்தன்மை(பொய்மை)யைச் சாதிக்கின்ருர்:—

रागद्वेषादिसंकुलः संसारः स्वप्नतुल्यः स्वकाले सत्यवत् भाति प्रबोधे असत्यवत् भवेत् ॥

(சு-ம்.) ராகத்துவேஷமுதலியவற்ருல் நெருங்கிய சம்சாரம் சொப்பனசமானமாய்த் தனது காலத்துச் சத்தியம்போல் விளங்குகின்றது. விழிப்புக்காலத்தில் அசத்தியம் போலாகின்றது.

(வி-ம்) * கரு. ராகத்துவேஷாதிகளால் நெருங்கியுள்ள ஜனனமரண(பிறப்பிறப்பு)வடிவ சம்சாரம், சொப்பனம் நித்திரைக்காலத்துச் சத்தியமாய்த் தோற்றி, விழித்தபோது அசத்தியமாய்த் தோற்றுவது போலத் தனது காலத்து அதாவது தனக்குக் காரணவடிவமான அஞ்ஞானமுள்ளபோது சத்தியம்போல் விளங்குகின்றது. வேதாந்தவாக்கியசிரவணத்தால் ஆத்மஞானம் வந்தபோது அசத்தியம்போலாகின்றது என்பது பொருள்.(சு)

तावत्सत्यं जगद्भाति शुक्तिकारजतं यथा ।
यावन्न ज्ञायते ब्रह्म सर्वाधिष्ठानमद्वयम् ॥ ७ ॥

(அ-கை.) முற்கூறிய பொருளையே (ஜகத்து மித்தை யென்பதனையே) பிறிதோர் திருஷ்டாந்தத்தினல் திடப்படுத்துகின்ருர்:—

यथा शुक्तिकाराजेतं (तथा) सर्वाधिष्ठानं अद्वयं यावत् न ज्ञायते तावत् जगत् सत्यं भाति ॥

* கரு. ராகம்=விருப்பு. துவேஷம்=வெருப்பு. ஆதிசப்தத்தால் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மற்சரம், ஈரிஷை, அசூயை, டம்பம், தர்ப்பம், அகங்காரம் என்பனவும் கொள்ளப்படும்.

(சு-ம்.) சுத்தியில் இரஜதம்போல சர்வாதிஷ்டான அத்துவயமான பிரஹ்மம் எதுவரையில் அறியப்படவில்லையோ, அது வரையில் ஜகத்து சத்தியமாகத் தோற்றுகின்றது.

(வி-ம்) எப்படிக் கிளிஞ்சிலின் கரியமுதுகு முக்கோணத் தன்மைமுதலிய விசேஷஞான முண்டாகாதவரையில் இரஜத ஞானம் சத்தியம்போல் அறியப்படுகின்றதோ, அதுபோலச் சகல * கச. ஆரோபங்களுக்கும் * கரு. அதிஷ்டானமும் * கசு. அத்வைதமுமாகிய பிரஹ்மம் எதுவரையில் அறியப்படவில்லையோ (தன் சொரூபமாகச் சாக்ஷாத்தாக அநுபவிக்கப்படவில்லையோ), அதுவரையில் * கஎ. ஜகத்துவடிவமாகப் பரிணமித்த சம்சாரம் சத்தியம்போல் பிராந்தியினல் தோற்றுகின்றது என்பது பொருள். (எ)

उपादानेऽखिलाधारे जगंति परमेश्वरे ।
सर्गस्थितिलयं यान्ति बुद्बुदा इव वारिणि ॥ ८ ॥

(அ-கை.) சகல ஜகத்தும் பிரஹ்மத்தில் உற்பத்திஸ்திதி நாசங்களை அடைகிறதென்று கூறுகின்றார் :—

उपादाने अखिलाधारे परमेश्वरे जगंति वारिणि बुद्बुदाः इव सर्गस्थितिलयं यान्ति ॥

(இ-ள்.) சகல ஜகத்துக்கும் * கஅ. ஆதாரமாயும், * கக.

---

* கச. அஃதில்லாவிடத்து அதனை யறிதல் ஆரோபமாம். இதனையே அத்தியாச மென்றும், அத்தியாரோப மென்றும், கற்பனை யென்றும் கூறுவர்.

* கரு. எதனை யறியாதபோது ஆரோபந் தோற்றுமோ, எதனை யறிந்த காலத்து ஆரோபந் தோற்றுகிறதில்லையோ, அது அதிஷ்டான மெனப் படும்.

* கசு. இரண்டாவதில்லாதது அத்வைதம். துவைதம் இரண்டாவது.

* கஎ. அஞ்ஞானதசையில் பிரபஞ்சம் சத்தியமாய் விளங்குகிறது; ஞானதசையில் அசத்தியமாய்ப் போ மென்பது கருத்து.

* கஅ. ஆதாரம்=பற்றுக்கோடு.

* கக. குடத்திற்கு மண் போலிருக்கும் காரணம் உபாதானகாரண மெனப்படும்.

உபாதானகாரணமாயு முள்ள பரமேசுவரனிடத்தில் பிரபஞ்சங்கள் நீரிற்குமிழிகள்போல் உற்பத்தி ஸ்திதி நாச மடைகின்றன.

सच्चिदात्मन्यनुस्यूते नित्ये विष्णौ प्रकल्पिताः ।
व्यक्तयो विविधाः सर्वा हाटके कटकादिवत् ॥ ९ ॥

(அ-கை.) சகல * உ0. திருசியப்பிரபஞ்சமும் பிரஹ்மத்திலேயே மாயையாற் கற்பிக்கப்பட்டனவா மென்று கூறுகின்றார் :—

सच्चिदात्मनि अनुस्यूते नित्ये विष्णौ सर्वाः व्यक्तयः विविधाः (अपि) हाटके कटकादिवत् प्रकल्पिताः ॥

(சு-ம்) சத்துச்சித்துவடிவமும், எல்லாவற்றினுட்புகுந்ததும், நித்தியமும், வியாபகமுமான பிரஹ்மத்தில் சகல வியக்திகளும் நாநாவிதமாயினும் பொன்னிற் கடகமுதலியவற்றைப்போல் கற்பிக்கப்பட்டனவாம்.

(வி-ம்) சத்துச்சித்துவடிவமாயும், மணிகளில் நூல்போல் எல்லாவற்றினுட்புகுந்ததாயும், நான்கு * உக. அபாவமுமின்றிய நித்தியமாயும், வியாபகமாயு முள்ள ஆத்மாவாகிய பிரஹ்மத்தினிடத்தில் தேவதிரியக்காதிகளும் ஸ்தாவராதிகளுமான * உஉ. வியக்திகள் யாவும் வெவ்வேறுவகையா யிருக்கினும், அவை எல்லாவற்றிற்கும் உபாதானவடிவமான பரமேசுவரனிடத்தில் பொன்னிற்கடகமுதலியவற்றைப்போலக் கற்பிக்கப்பட்டனவேயாம்; பிரஹ்மத்தைவிட வேறாகா வென்பது பொருள். (கூ)

* உ0. திருசியம் = காணப்படுவது.

* உக. பிராகபாவம் (முன்னின்மை), பிரத்துவம்சாபாவம் (பின்னின்மை), அந்நியோந்நியாபாவம் (ஒன்றிலொன்றின்மை), அத்தியந்தாபாவம் (முழுதுமின்மை) என்னு மிவை நான்கபாவங்களாம். இவற்றின் விரிவை ஸ்ரீ விசாரசந்திரோதயம் பதினாறாவது கலையிலும், ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் ஆறாவது பிரகாசத்திலும், விருத்திரத்நாவலி ஏழவாது ரத்நத்திலும் காண்க.

* உஉ. கோத்தன்மை மனிதத்தன்மை யென்னும் இவைமுதலிய தர்மங்களிருத்தற்கு இடமா யுள்ள தேதுவோ அது வியக்தி யெனப்படும்.

यथाकाशो हृषीकेशो नानोपाधिगतो विभुः ।
तद्भेदाद्भिन्नवद्भाति तन्नाशे सति केवलः ॥ १० ॥

( அ-கை )

முற்கூறிய பொருளினையே ஆகாயதிருஷ்டாந்தத்தால் திடப்படுத்துகின்றார் :—

हृषीकेशः विभुः यथा आकाशः नानोपाधिगतः तद्भेदात् भिन्नवत् भाति तन्नाशे सति केवलः भवेत् ॥

(சு-ம்) ஹிருஷிகேசனும் வியாபகனுமாகிய பரமாத்மா ஆகாயம்போல நாநாவுபாதிகளையுடையவராய் அவ்வுபாதிபேதத்தால் பின்னம்போல் தோற்றுகிறார் ; அவ்வுபாதிநாசத்தில் ஏக மாகின்றார்.

(வி-ம்) * உங. ஹ்ருஷீகேசனும் வியாபகனுமாகிய பரமாத்மா, ஒரே ஆகாயம் கடபடாதியுபாதிகளில் நாநாவைப்போலத் தோற்றி உபாதி யொடுங்கியபோது ஒன்றுகவே தோற்றுவதுபோல், அஞ்ஞானகற்பித நாநா * உச. வுபாதிகளில் பிரதிபிம்பித்தவராய், உண்மையில் தமக்குப் பேத மில்லையாயினும், அவ்வுபாதிபேதத்தால் பேதமுடையவராகக் காணப்படுகின்றார். அவ்வுபாதி நசித்தபோது அதாவது பிரஹ்மாத்மைக்கியஞானத்தினல் அம்மாயாகற்பித தேகாதியுபாதிகள் நசித்தபோது கேவலமாகின்றார் அதாவது ஒருவரே யாகின்றார். ( க0 )

---

* உங. ஹ்ருஷீக + ஈசன் = ஹ்ருஷீகேசன்; ஹ்ருஷீகம் = மனுதி இந்திரியங்கள், ஈசன் = அவற்றை நடத்துவோன்.

* உச. கடமானது தனது ஆசிரயமாகிய ஆகாயத்தின் சொரூபத்திற் பிரவேசியாமல் அவ்வாகாயத்தை மற்றைக் கடாகாயமுதலியவற்றினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதுபோல, எது தனது ஆசிரயத்தின் சொரூபத்திற் பிரவேசியாது அவ்வாசிரயத்தினைப் பிறவற்றினின்றும் வேறுபடுத்திக் காட்டுகின்றதோ, அப்படிப்பட்ட வியாவர்த்தகம் உபாதி யெனப்படும். இங்கு மாயையும் அவித்தையும் அவற்றின் காரியங்களும் உபாதிகளாம். வியாவர்த்தகம் = வேறுபிரித்துக்காட்டுவது.

नानोपाधिवशादेव जातिवर्णाश्रमादयः ।
आत्मन्यारोपितास्तोये रसवर्णादिभेदवत् ॥ ११ ॥

(அ-கை) அவ்வாறுயின் சர்வசரீரங்களிலும் அந்தந்த ஜாதி தர்மமுதலியவற்றின் அபிமானியாயுள்ள ஆத்மாவிற்கு நித்தியமுக்தத்துவம் எவ்வாறு பொருந்துமெனக் கூறுகின்றார்:-

तोये रसवर्णादिभेदवत् आत्मनि जातिवर्णाश्रमादयः नानोपाधिवशात् एव आरोपिताः ॥

(சு-ம்.) ஜலத்தில் இரசம் வர்ணமுதலியவற்றைப்போல ஆத்மாவினிடத்து ஜாதிவர்ணம் ஆசிரமமுதலியன நாநாவுபாதிவசத்திலேயே கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

(வி-ம்.) சுபாவமாக மதுரமும் நிர்மலமுமான ஜலம், கைப்புமுதலியரசமும் செம்மைமுதலியநிறமுமுள்ள திரவியங்களோடு சேர்ந்து அந்தந்தவடிவ மாகின்றது; இயல்பாக வன்று. அது போல் பிராஹ்மணத்துவாதி ஜாதி * உடு. கருப்புச் சிவப்பு முதலிய நிறம், பிரஹ்மசாரியாதி ஆசிரமமுதலியன முற்கூறிய நாநாவிதமான உபாதியின் வசத்திலேயே ஆத்மாவில் மாயையினல் கற்பிக்கப்பட்டனவாம்; இயல்பாக வன்று. (கக)

पंचीकृतमहाभूतसंभवं कर्मसंचितम् ।
शरीरं सुखदुःखानां भोगायतनमुच्यते ॥ १२ ॥

(அ-கை.) ஆத்மாவிற்கு அவித்தியாகற்பித உபாதி மூன்றனுள் முதல் ஸ்தூலோபாதியைக் கூறுகின்றார் :—

पंचीकृतमहाभूतसंभवं कर्मसंचितं शरीरं सुखदुःखानां भोगायतनं उच्यते ॥

* உடு. நாமம் என்னும் பாடத்தில் தேவதத்தன் சோமதத்தன்முதலிய பெயர் என்பது பொருள்.

(சு-ம்.) * உசு. பஞ்சீகிருதமான ஸ்தூலப்பிருதிவியாதி மகாபூதத்தாற்றோன்றியதும், பிராரப்தகர்மத்தாற் சேர்க்கப்பட்டதுமான ஸ்தூலசரீரம் பிரத்தியகாத்மாவினது சுகதுக்கங்களின் * உஎ. போகாயதன மென்று சொல்லப்படுகிறது. (கஉ)

पञ्चप्राणमनोबुद्धिदशेंद्रियसमन्वितम् ।
अपंचीकृतभूतोत्थं सूक्ष्मांगं भोगसाधनम् ॥ १२ ॥

(அ-கை.) இரண்டாவது சூக்ஷ்மவுபாதியைக் கூறுகின்றார் :—

पंचप्राणमनोबुद्धिदशेंद्रियसमन्वितं अपंचीकृतभूतोत्थं सूक्ष्मांगं भोगसाधनम् ॥

(சு-ம்.) பஞ்சப்பிராணமனோபுத்திதசேந்திரியங்களோடு கூடியதும், அபஞ்சீகிருதபூதங்களினின் றுண்டாகியதுமான சூக்ஷ்மசரீரம் போகசாதனமாம்.

(வி-ம்.) பிராணன், அபானன், வியானன், உதானன், சமானனென்னும் பஞ்சப்பிராணன், சங்கற்பவிகற்பவடிவ மனது, நிச்சயவடிவ புத்தி, சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்வை, ஆக்கிராணம், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபஸ்த மெனப்ப

---

*உசு. ஒவ்வொரு பூதத்தையும் இரண்டிரண்டாகப் பிரித்து, முற்பாதி விட்டுப் பிற்பாதியை நந்நான்காக்கி, அதில் ஒவ்வொன்றையும் தன்னம்சமொழிந்த மற்றைப் பூதங்களின் முற்பாதிகளோடு சேர்க்க ஒவ்வொருபூதமும் அவ்வைந்தாகின்றன. இதனைப் பஞ்சீகரண மென்பர். இவ்வாறு பஞ்சீகரணஞ் செய்யப்பட்ட பூதங்கள் பஞ்சீகிருதபூத மெனப்படும். இப்பஞ்சீகரணக்கிரமம் ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் மூன்றுவது கலையிலும் ஸ்ரீ பாலபோதத்தின் மூன்றும் உபதேசத்திலும் மிகத்தெளிவாய் எழுதப்பட்டிருக்கின்றது. அங்குக் காண்க.

* உஎ. போகாயதனம்=போகத்திற்கிடம். போகம்=சுகதுக்கங்களையறிதல். ஆயதனம்=இடம்.

டும் தசேந்திரியங்க ளென்னு மிவற்ருேடுகூடியதும் * உஅ. அபஞ் சீகிருதபூதத்திற்ருேன்றியதுமான ருக்ஷ்மசரீரம் * உகூ. போக சாதனமாம். (கங)

अनाद्यविद्याऽनिर्वाच्या कारणोपाधिरुच्यते ।
उपाधित्रितयादन्यमात्मानमवधारयेत् ॥ १४ ॥

(அ-கை.) மூன்ருவதான காரணவுபாதியைக் கூறுகின் ருர்:—

अनिर्वाच्या अनाद्यविद्या कारणोपाधिः उच्यते ।

(சு-ம்.) * ௩௦. அநிர்வாச்சியமான * ௩௧. அநாதி * ௩௨. அவித்தை * ௩௩. காரணோபாதி எனப்படுகின்றது,

(அ-கை.) இவ்வாறு மூவகை உபாதியினைக் கூறிவந்ததின் பிரயோஜனத்தைக் காட்டுகின்ருர்:—

---

* உஅ. எந்தப்பூதங்களுக்குப் பஞ்சிகாண முண்டாகவில்லையோ அவை அபஞ்சீகிருத மெனப்படும். இவை மனுதியிந்திரியங்களுக்குப் புலப் படத்தக்கவைக ளாகாமையின் சூக்ஷ்மபூத மெனப்படும். ஒவ்வொருபூத மும் கலப்பின்றி அதாவது அததுமாத்திரையா யிருத்தலின் தன்மாத் திரை யென்றும், ஆத்மாவை யறிதற்கு லிங்கமா (குறியா) யிருத்தலின் லிங்கசரீர மென்றும் கூறப்படும்.

* உகூ. போகசாதனம்—போகத்திற்குக் கருவி.

* ௩௦. அவித்தை கானற்சலத்தைப்போலப் பரமார்த்ததசையி லில் லாமையால் சத்தென்ருவது, விவகாரதசையில் அநேக ஜனனமாணப் பிரவாகத்திற் கிடங்கொடுத்துக் கொண்டிருத்தலால் அசத்தென்ருவது, ஒன்றற்கொன்று விரோதமாகுதலால் சதசத்தென்ருவது உறுதியாய்ச் சொல்லக்கூடாததா யிருத்தலால் அநிர்வாச்சியமாம். அநிர்வசநீய மென் பதுமிது.

* ௩௧. ஒருகாலத் துண்டாகாததா யிருத்தலின் அநாதியாம்.

* ௩௨. வித்தையினுல் கெடுவதா யிருத்தலின் அவித்தையாம்.

* ௩௩. ஸ்தூலம் சூக்ஷ்ம மென்னு மிரண்டு உபாதிகளும் தோன்றுவ தற்கு இவ்வவித்தையே காரணமாகலின் இது காரணோபாதி யெனப்படு கின்றது.

उपाधित्रितयात् अन्यं आत्मानं अवधारयेत् ॥

(சு-ம்.) உபாதிமூன்றற்கும் வேறான ஆத்மாவை அறிய வேண்டும்.

(வி-ம்.) இம்மூவகை உபாதியினும் வேறாகவே இவற்றின் சாக்ஷியாகிய ஆத்மாவை நிச்சயிக்கவேண்டும் (இதுவே பிரயோஜனம்) என்பது பொருள். (கச)

पंचकोशादियोगेन तत्तन्मय इव स्थितः ।
शुद्धात्मा नीलवस्त्रादियोगेन स्फटिको यथा ॥ १९ ॥

(அ-கை.) அப்படியானல் அந்நமயாதிகோசங்களில் வியாபித்து அந்தந்தக்கோசவடிவமாயுள்ள ஆத்மாவிற்கு நித்தியமுக்தத்துவம் எவ்வாறு கூடுமென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

नीलवस्त्रादियोगेन स्फटिकः यथा (तथा) पंचकोशादियोगेन शुद्धात्मा तत्तन्मयः इव स्थितः ॥

(சு-ம்.) நீலவஸ்திரமுதலியவற்றின் சம்பந்தத்தால் ஸ்படிகம் எப்படியோ, அப்படியே பஞ்சகோசாதிகளின் சம்பந்தத்தால் சுத்தாத்மா அந்தந்தமயமானதுபோல் நிலைத்திருக்கின்றது.

(வி-ம்.) ஸ்படிகமானது நீலவஸ்திராதிகளின் சேர்க்கையால் அந்தந்தவர்ணமுடையதாய்த் தோற்றினும் உண்மையில் அவற்றோடு கலவாததுபோல் சுத்தமாகிய ஆத்மா *ரு-ச. பஞ்ச

* ரு-ச. பஞ்சகோசங்களாவன :—அந்நமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமய மென்பன. அவற்றுள், (க) சுக்கிலாதி அந்நத்தாற்றோன்றி, பால்முதலிய அந்நத்தால் வளரும் ஸ்தூலசரீரம் கத்தியின் உறைமுதலியவற்றைப்போல ஆத்மாவை மறைத்துக்கொண்டிருத்தலால் அந்நமயகோச மெனப்படும். (உ) எந்த வாயு உள்ளங்கால்முதல் உச்சிவரையில் நிறைந்து வியானவடிவத்தால் சாமர்த்தியரூபபலத்தைக் கொடுத்துக்கொண்டு நேத்திரமுதலிய இந்திரியங்களை இயக்குகின்றதோ, அது கர்மேந்திரியத்தோடு பிராணமயகோச மெனப்படும். (ரு) சங்கற்பவிகற்பவடிவ மனது ஞானேந்திரியங்களோடு மனோமயகோச மெனப்படும்

கோசாதிகளின் சேர்க்கையால் அதாவது மித்தையாகிய தாதாத்மியத்தால் * ௩டு. அந்தந்தமயமானதுபோல் நிலைத்திருக்கின்றது; உண்மையி லில்லை.

பஞ்சகோசாதி என்பதிலுள்ள ஆதிசப்தத்தால் பசிதாகங்களான பிராணதர்மங்களும், சோகமோகங்களான மனதின் தர்மங்களும், ஜனனமரண மென்னும் தேகதர்மங்களுமாகிய ஷடூர்மி (ஆறு அலை)களும் கொள்ளப்படும். (கரு)

वपुस्तुषादिभिः कोशैर्युक्तं युक्त्यवघाततः ।
आत्मानमांतरं शुद्धं विविच्यात्तण्डुलं यथा ॥ १६ ॥

(அ-கை.) * ௩சு. அசங்கமான ஆத்மஸ்வரூபத்தை யறிதற்பொருட்டு விவேகிக்கும் கிரமத்தைக் கூறுகின்றார்:—

कोशैः वपुस्तुषादिभिः युक्तं आंतरं शुद्धं आत्मानं युक्त्यवघाततः यथा तण्डुलं (तथा) विविच्यात् ।

(சு-ம்.) கோசங்களாகிய சரீரவடிவ உமிமுதலியவற்றோடு கூடியதும், உள்ளிருப்பதும், சுத்தமுமான ஆத்மாவை யுக்தியாகிய குத்துதலால் அரிசியினைப்போல வேறுபிரிக்கவேண்டும்.

(வி-ம்.) பஞ்சகோசங்களோடுகூடி, அவ்வளவினாலே மித்தியாதாதாத்மியத்தினால் கற்பிதமான ஸ்தூலசரீராதிகளோடு

---

(ச)நிச்சயவடிவ புத்தி ஞானேந்திரியங்களோடு விஞ்ஞானமயகோசமாம். (ரு.) காரணசரீரத்துள்ள சத்துவம் பிரியம் மோதமுதலிய விருத்திகளோடு ஆநந்தமயகோச மெனப்படும். இஷ்டவஸ்துவைக் கண்டமாத்திரத்திலுண்டாகும் சுகவிருத்தி பிரியவிருத்தி. அவ்வஸ்துவினைப் பெற்றகாலத்துண்டாகும் சுகவிருத்தி மோதவிருத்தி. அவ்வஸ்துவினை யநுபவிக்குங் காலத்துண்டாகும் சுகவிருத்தி பிரமோதவிருத்தி.

* ௩டு. அன்னமயாதிகளை ஆத்மா வென்று சுருதி கூறியது, அதிசூக்ஷ்மமான ஆத்மாவை யறிவித்தற்பொருட்டு ஸ்தூலமான உபாதியோடு கூடிய ஆத்மாவை சூசிப்பித்ததே யல்லாது பரமார்த்தமாய்க் கோசங்களை ஆத்மா வென்று கூறிய தன்று; அவ்விடத்திற்றானே ஆத்மாவைக் கோசவிலக்ஷண னாக்கக் கூறுவதுதான்.

* ௩சு. சங்கம் = சம்பந்தம் = அஃதில்லாதது அசங்கம்.

கூடி, அவ்வவ்வடிவமாகவும் அந்தரமாகவும் சுத்தமாகவுமுள்ள ஆத்மாவை உமிமுதலியவற்ருேடு கூடிய அரிசியினைக் குத்தி வெளிப்படுத்துவதுபோல மனனுதியுக்தியாகிய குத்துதலால் வேறுபிரித்தறியவேண்டும்.

இந்த ஸ்தூலதேகம் ஆத்மா வன்று, பூதகாரிய மாதலால், கடாதிகளைப்போல ; சூக்ஷ்மதேகமும் அவ்வாறே ஆத்மா வன்று, தேகமா யிருத்தலால், ஸ்தூலதேகம்போல என்னும் அநுமான முதலியவற்ருல் அக்கோசங்களினின்றும் வேருக ஆத்மாவை வேறுபிரித்தறியவேண்டு மென்பது பொருள். (கசு)

सदा सर्वगतोप्यात्मा न सवत्रावभासते ।
बुद्धावेवावभासते स्वच्छेषु प्रतिबिंबवत् ॥ १७ ॥

(அ-கை.) அப்படியானுல் ஆத்மா எல்லாவற்றினு மிருப்பதாக எங்கு மெல்லோராலும் ஏன் காணப்படுகிறதில்லையெனக் கூறுகின்ருர் :—

आत्मा सदा सर्वगतः अपि सर्वत्र न अवभासते स्वच्छेषु प्रतिबिंबवत् बुद्धौ एव अवभासते ॥

(சு-ம்.) ஆத்மா எப்போதும் எல்லாவற்றினு மிருப்பதாயினும் எங்கும் பிரகாசிக்கிறதில்லை. சொச்சத்திரவியங்களில் பிரதிபிம்பம்போலப் புத்தியில்மாத்திரமே பிரகாசிக்கிறது.

(வி-ம்.) ஆத்மா எப்போதும் எல்லாவற்றினு மிருப்பதாயினும் எங்கும் சுயம்பிரகாசமாயினும் வெளியிற் பிரவர்த்தித்த ஜடமான இந்திரியங்களுக்கு விஷயமாகக் காணப்படுகிறதில்லை. ஆனுல் பிரதிபிம்பம் எங்கும் காணப்படாது, கண்ணுடிமுதலிய * ஙஎ. சொச்சத்திரவியங்களில் மாத்திரம் காணப்படுவதுபோல் ராகத்துவேஷங்களில்லாத புத்தியிலேயே காணப்படுகின்றது.

---

* ஙஎ. கண்ணுடி நீர்முதலியவற்றைப் போன்ற பளபளப்புள்ள வஸ்துக்கள் சொச்சத்திரவிய மெனப்படும். ஸ்வச்சத்ரவ்ய மென்பது சம்ஸ்கிருதச்சொல்.

देहेंद्रियमनोबुद्धिप्रकृतिभ्यो विलक्षणम् ।
तद्वृत्तिसाक्षिणं विद्यादात्मानं राजवत्सदा ॥ १८ ॥

(அ-கை.) தேகேந்திரியாதிகளோடுகூடியிருக்கும் ஆத்மாவின் * ௩அ. உதாசினத்தன்மையினை அரசனது திருஷ்டாந்தத்தாற் கூறுகின்றார் :—

आत्मानं सदा राजवत् देहेन्द्रियमनोबुद्धिप्रकृतिभ्यो विलक्षणं तद्वृत्तिसाक्षिणं विद्यात् ॥

(சு-ம்.) ஆத்மாவை எப்போதும் ராஜாவைப்போல தேகேந்திரியமனோபுத்திபிரகிருதிகளுக்கு வேறாகவும், அவற்றின் வியாபாரங்கட்குச் சாக்ஷியாகவும் அறிக.

(வி-ம்.) சுத்தாத்மாவினைத் தேகம், இந்திரியம், மனம், புத்தி, பிரகிருதி யென்னும் ஜடமான திருசியங்களைவிட விலக்ஷணமாயும், அவற்றின் வியாபாரங்களாகிய விருத்திகளுக்கு * ௩கூ. இராஜா தன்னகரத்திலுள்ள மந்திரிமுதலியோரால் பிரவிருத்திக்கப்பட்ட காரியங்களில் தான் சாக்ஷியாக இருத்தல்போல் சாக்ஷியாயும் அறிக. (மஅ.)

व्यापृतेष्विंद्रियेष्वात्मा व्यापारीवाविवेकिनाम् ।
दृश्यतेऽभ्रेषु धावत्सु धावन्निव यथा शशी ॥ १९ ॥

(அ-கை) அப்படியானுல் ஆத்மா எப்போதும் வியாபாரமுடையதாகக் காணப்படுகின்றமையால் அதற்கு * அவிகாரித்துவம் பொருத்தமுடையதாகாதெனக் கூறுகின்றார் :—

---

* ௩அ. விருப்பு வெருப்பில்லாததன்மை உதாசினத்தன்மையாம்.

* ௩கூ. அரசன் தன் சந்நிதானத்தில் மந்திரிமுதலானோர் சகல வியவகாரங்களேயும் செய்யத் தான் அவற்றை எப்படிச் சாக்ஷியாய்ப் பார்த்துக்கொண்டிருக்கின்றனே, அதுபோல ஆத்மா இந்திரியாதிகள் தன் சந்நிதியிற் செய்யும் வியாபாரங்கட்குத் தான் சாக்ஷியா யிருக்கின்றது.

* ௪0. பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறைதல், நசித்தலென்னும் ஆறுவிகாரங்களேயு முடையதன்மை விகாரித்துவமாம். அஃதின்மை அவிகாரித்துவம்.

यथा शशी अभ्रेषु धावत्सु धावन् इव दृश्यते (तथा) अविवेकिनां आत्मा इंद्रियेषु व्यापृतेषु व्यापारी इव दृश्यते ॥

(சு-ம்.) எப்படிச் சந்திரன் மேகங்கள் ஓடுங்கால் ஓடுவது போல் காணப்படுகின்றதோ, அதுபோல் அவிவேகிகளுக்கு ஆத்மா இந்திரியங்கள் வியாபாரஞ்செய்யுங்காலத்து வியாபார முடையது போல் காணப்படுகின்றது.

(வி-ம்.) மேகங்கள் வாயுவசத்தால் ஓடுங்கால் சந்திரன் ஓடுவதாகக் காணப்படுகிறது; சந்திரன் ஓடுகிறதில்லை. அது போல இந்திரியங்கள் தத்தம் வியாபாரஞ்செய்யுங்கால் ஆத்மா குருசாஸ்திரவுபதேசமில்லாத அவிவேகிகளுக்கு வியாபாரமுடையதுபோற் காணப்படுகின்றது; தத்துவதிருஷ்டியினால் காணப்படுகிறதில்லை. (கசு)

आत्मचैतन्यमाश्रित्य देहेंद्रियमनोधियः ।
स्वकीयार्थेषु वर्तंते सूर्यालोकं यथा जनाः ॥ २० ॥

(அ-கை.) அப்படியானால் தேகேந்திரியமனோபுத்திகளும் ஆத்மாவைப்போலச் சேதனங்களாகக் காணப்படுவதென்னை யென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

देहेंद्रियमनोधियः आत्मचैतन्यं आश्रित्य यथा जनाः सूर्यालोकं स्वकीयार्थेषु वर्तंते ॥

(சு-ம்.) தேகேந்திரியமனோபுத்திகள் ஆத்மசைதன்னியத்தை யாசிரயித்து, ஜனங்கள் சூரியப்பிரகாசத்தைக் கொண்டு வியவகரிப்பதுபோலத் தத்தம் காரியங்களில் பிரவர்த்திக்கின்றன.

(வி-ம்.) தேகேந்திரியமனோபுத்திகள் நித்தியஞானசொரூபமான பிரத்தியகாத்மாவின் சேதனத்தன்மையினை யாசிரயித்து, ஜனங்கள் சூரியப்பிரகாசத்தை அவலம்பித்து (ஆதாரமாகக் கொண்டு) தத்தம் உலகவியாபாரங்களிற் பிரவர்த்திப்பதுபோலத் தத்தம் விஷயங்களில் பிரவர்த்திக்கின்றன. இதனால் தேகேந்திரியாதிகள் ஜடங்களே யென்பது பொருள். (உ0)

देहेंद्रियगुणान्कर्माण्यमले सच्चिदात्मनि ।
अध्यस्यंत्यविवेकेन गगने नीलतादिवत् ॥ २१ ॥

(அ-கை.) அப்படியானால் "நான் பிறந்தேன், நான் வளர்ந்தேன், நான் பாலியாதி அவஸ்தைகளைக் கிரமமாக அநுபவித்து வருகிறேன், பார்க்கிறேன், நிற்கிறேன்." என்னு மிவைமுதலிய அநேக விகாரங்களை அநுபவித்துக்கொண்டிருக்கும் ஆத்மாவிற்கு அவிகாரித்துவம் கூறுவ தெப்படி யென்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

देहेंद्रियगुणान् कर्माणि अमले सच्चिदात्मनि अविवेकेन गगने नीलतादिवत् अध्यस्यंति ॥

(சு-ம்) தேகேந்திரியகுணங்களையும் கர்மங்களையும் அமலமான சத்தியஞானவடிவ ஆத்மாவில் அவிவேகத்தால் ஆகாயத்தில் நீலத்துவமுதலியவற்றைப்போல அத்தியசிக்கின்றார்கள்.

(வி-ம்.) அஞ்ஞானிகள் தேகேந்திரியமனோபுத்திகளின் தர்மங்களையும், சத்துவாதிகுணங்களையும், கர்மேந்திரியவியாபாரங்களான கர்மங்களையும் மித்தையாகிய தாதாத்மியத்தினால் நிலைத்துள்ள *சக. அமல அசங்கமாகிய சச்சிதாநந்தபரமாத்மாவினிடத்து அத்தியந்தசமீபத்தன்மையால் அவிவேகத்தினால் நிர்மல நிரவயவ ஆகாயத்தில் கருமைமுதலியவற்றினை யாரோபிப்பதுபோல ஆரோபிக்கின்றார்கள். ஆதலால் அவை ஆத்ம தர்மங்களாகா; தேகேந்திரியாதிகளுடையனவேயா மென்பது பொருள். (உக)

अज्ञानान्मानसोपाधेः कर्तृत्वादीनि चात्मनि ।
कल्प्यंतेंबुगते चंद्रे चलनादि यथांभसः ॥ २२ ॥

(அ-கை.) கர்த்திருத்துவபோக்திருத்துவாதிகள் யாவும்

* சக. அமல—மலமின்றிய.

ஆத்மாவினிடத்து எப்போதும் அநுபவிக்கப்படுதலால் அவை யும் நீக்கக்கூடாதனவா மென்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

अंभसः चलनादिः अंबुगते चंद्रे यथा (तथा) मानसोपाधेः कर्तृत्वादानि च अज्ञानात् आत्मनि कल्प्यंते ॥

(சு-ம்.) ஜலத்தின் அசைவுமுதலியவற்றினை அதிற் பிரதி பிம்பித்த சந்திரனிடத்திற் கற்பிப்பதுபோல, அந்தக்கரணோபாதி யின் கர்த்திருத்துவாதிகளை அஞ்ஞானவசத்தால் (அதனை யறி யாததினால்) இப்பிரத்தியகாத்மாவில் ஆரோபிக்கின்றார்கள்.(உஉ)

रागेच्छासुखदुःखादि बुद्धौ सत्यां प्रवर्तते ।
सुषुप्तौ नास्ति तन्नाशे तस्माद्बुद्धेस्तु नात्मनः ॥ २३ ॥

(அ-கை.) இச்சை, துவேஷம், சுகம், துக்கமுதலியவற்றை ஆத்மதர்மங்களாக வைசேஷிகர்முதலியோர் கொள்ளுகின்றனர். அதனை மறுக்கின்றார் :—

रागेच्छासुखदुःखादि बुद्धौ सत्यां प्रवर्तते । सुषुप्तौ तन्नाशे नास्ति तस्मात् बुद्धेः तु न आत्मनः ।

(சு-ம்.) ராகம், இச்சை, சுகம், துக்கமுதலியன அந்தக் கரண முள்ளபோது அதாவது ஜாக்கிரசொப்பனங்களிற் பிர விருத்திக்கின்றன. அவ்வந்தக்கரணம் நாசமாகிய சுழுத்தியில் அவை இல்லை. ஆதலால் அவை அந்தக்கரணத்தினுடையன வாம்; ஆத்மாவினுடைய வன்று என்பது பொருள். (உஙு)

प्रकाशोऽर्कस्य तोयस्य शैत्यमग्नेर्यथोष्णता ।
स्वभावः सच्चिदानंदनित्यनिर्मलतात्मनः ॥ २४ ॥

(அ-கை.) அந்த ஆத்மாவிற்குச் சொரூபந்தான் யாதென்று கேட்குமிடத்து ஆத்மாவின் சுபாவத்தைக் கூறுகின்றார்:—

अर्कस्य प्रकाशः तोयस्य शैत्यं अग्नेः उष्णता यथा (तथा) आत्मनः सच्चिदानंदनित्यनिर्मलता स्वभावः।

(சு-ம்.) சூரியனுக்குப் பிரகாசமும், ஜலத்திற்குக் குளிர்ச்சியும், அக்கினிக்கு உஷ்ணமும் சொரூபமாவதுபோலச் * சஉ. சச்சிதாநந்த நித்திய நிர்மலத்தன்மை ஆத்மாவின் சுபாவ(சொரூப) மாம். (உச)

आत्मनः सच्चिदंशश्च बुद्धेर्वृत्तिरिति द्वयम्।
संयोज्य चाविवेकेन जानामीति वर्तते ॥ २५ ॥

(அ-கை) ஆத்மா விகாரியா யிருக்கின் அதற்கு நானறிகிறே னென்னும் விருத்தி எப்படிக் கூடு மென்று கேட்குமிடத்துக் கூறுகின்றார் :—

आत्मनः सच्चिदंशः बुद्धेः वृत्तिः च इति द्वयं संयोज्य अविवेकेन जानामि इति प्रवर्तते।

(சு-ம்.) ஆத்மாவின் சத்துச்சித்தம்சமும் புத்தியின் விருத்யுமான இவ்வித இரண்டையும் சேர்த்து, அவிவேகத்தினால் அறிகிறேன் என்று அகங்கார விருத்தி பிரவர்த்திக்கிறது.

(வி-ம்.) ஆத்மாவின் சத்துச்சித்தம்சமும் அதாவது அம்சம்போன்ற அம்சமாகிய ஆத்மாபாசமும், புத்தியின் விருத்தியுமாகிய இரண்டும் அவிவேகத்தினாற் கூடி, அசங்கமாகிய ஆத்மாவிற்கு எதனோடும் சேர்க்கை யில்லையாயினும், அஞ்ஞானவசத்தினால் சேர்க்கையைப் பொருந்தச் செய்து, அதனால் நானறிகிறேனென்னும் பிரத்தியயமாகிய அகங்காரவிருத்தி பிரவர்த்திக்கி

* சஉ. மூன்றுகாலத்தும் பொய்யென்று நிச்சயிக்கப்படாததன்மை சத்துத்தன்மை. குன்றாத பிரகாசத்தன்மை சித்துந்தன்மை. மிகுந்த பிரியத்திற்கு விஷயமாந்தன்மை ஆநந்தத்தன்மை. உற்பத்தியில்லாததன்மை நித்தியத்தன்மை. அவித்தையாதிமலங்க ளில்லாததன்மை நிர்மலத்தன்மை.

றது. கேவலம் பிரத்தியகாத்மாவில் சிறிதும் விகார மில்லையென்பது கருத்து. (உரு)

आत्मनो विक्रिया नास्ति बुद्धेर्बोधो न जात्विति ।
जीवः सर्वमलं ज्ञात्वा ज्ञाता द्रष्टेति मुह्यति ॥ २६ ॥

(அ-கை.) முற்சுலோகத்திற் கூறிய அர்த்தத்தினையே விளக்குகின்றார் :—

आत्मनः विक्रिया न अस्ति बुद्धेः जातु बोधः न इति जीवः सर्वं अलं ज्ञात्वा ज्ञाता द्रष्टा इति मुह्यति ॥

(சு-ம்.) ஆத்மாவிற்கு விகாரமுடைமை யில்லை, புத்திக்கு ஒரு போதும் ஞான மில்லை என்று ஜீவன் எல்லாவற்றையும் மிகுதியாய் அறிந்து, யான் அறிகிறவன், காண்கிறவன் என்று மோகிக்கிறான்.

(வி-ம்.) பிரத்தியகாத்மாவிற்கு இயல்பாக விகார மில்லை. புத்திக்கு ஒருகாலத்தும் ஞான மில்லை. அப்படியாயினும், புத்தியிற் பிரதிபிம்பித்த அகங்காரத்தோடுகூடிய ஜீவன் ஆபாஸத்தோடுகூடிய அந்தக்கரணவிருத்தி யெல்லாவற்றையும் காச்சிய இருப்புத்துண்டைப்போல ஒன்றுபடுத்தித் தானென்றறிந்து நான் அறிகிறவன் பார்க்கிறவனென்று மோகிக்கின்றான். (கர்த்தா செய்கிறவன் என்றும் பாட முண்டு.) (உசா)

रज्जौ सर्पवदात्मानं जीवं ज्ञात्वा भयं वहेत् ।
नाहं जीवः परात्मेति ज्ञातः चेन्निर्भयो भवेत् ॥ २७ ॥

(அ-கை.) ஆத்மா தானே தன்னிடத்து அவிவேகத்தினால் பிறவற்றின் தர்மங்களை யாரோபித்துப் பயப்படுகிறானென்று கூறுகின்றார் :—

रज्जौ सर्पवत् आत्मानं जीवं ज्ञात्वा भयं वहेत् । अहं न जीवः परात्मा इति ज्ञातः चेत् निर्भयः भवेत् ॥

(சு-ம்.) பழுதையிற் பாம்புபோலத் * சங. தன்னை ஜீவ னென்று அறிந்து பயத்தைக் கொள்ளுகின்றான். "யான் ஜீவ னல்லன்; பரமாத்மா." என்று அறிந்தானாயின் பயமற்றவனா கின்றான். (உஎ)

आत्मावभासयत्येको बुद्ध्यादीनींद्रियाणि च ।
दीपो घटादिवत्स्वात्मा जडैस्तैर्नावभास्यते ॥ २८ ॥

(அ-கை.) ஆத்மா தனக்கத்தியந்த பிரியமுள்ள புத்திமுத லியவற்றால் ஏன் அறியப்படுகிறதில்லை யெனக் கூறுகின்றார்:—

एकः आत्मा बुध्यादीनि इंद्रियाणि च दीपः घटादिवत् अवभासयति जडैः तैः स्वात्मा न अवभास्यते ॥

(சு-ம்.) ஏகமாகிய ஆத்மா, புத்திமுதலியவற்றினையும் இந் திரியங்களையும், தீபமானது கடமுதலியவற்றை விளக்குவது போல விளக்குகின்றது. ஜடமாகிய அவற்றால் ஆத்மா விளக்கப் படுகிறதில்லை.

(வி-ம்.) ஏகமாகிய ஆத்மா, புத்திமுதலியவற்றினைத் தீப மானது கடமுதலியவற்றை விளக்குவதுபோல விளக்குகின்றது.

---

* சங. மந்தாந்தகாரத்தினால் சர்ப்பமல்லாத கயிற்றினைச் சர்ப்ப மென்று கண்டு பயந்து வெகு துக்கசாகரத்தில் மூழ்கினவனாகின்றான். அதுபோல் ஆத்மா ஜீவனல்லாத தன்னை ஜீவனென்று கண்டதினால் பயந்து துக்கியாகின்றான். இது சர்ப்பமல்ல கயிறென்று கண்டபோது பயமொழி ந்து சுகியாவதுபோலச் சாஸ்திராசாரியப்பிரசாதத்தினால் வேதாந்தசாஸ்தி ரார்த்தஞான முண்டாகும்போது விவேகநேத்திரத்தால் தன்னை அத்வி தீய அபரிச்சின்ன அகண்டாநந்தஞான ஏகரசமேயாகச் செவ்வையாய்க் கண்டு, அதனால் யான் ஜீவனல்லன், யான் பரமாத்மா வென்றறிந்து பய துக்காதிக ளில்லாது சுகியாகின்றான்.

சொப்பிரகாசவடிவ ஆத்மாவிற்குப் பிராந்தி எவ்வாறுண்டாகும்? கயிற் றிற் சர்ப்பத்தினைக் கண்டவன் வேறா யிருத்தல்போல ஆத்மாவில் ஜீவத்து வத்தைக் கண்டது யார்? என்னு மிவைமுதலிய சங்கைகட்குச் சமாதானம் ஸ்ரீ விசாரசாகரம் விருத்திப்பிரபாகரமுதலிய நூல்களிற் காண்க.

ஆனுல் தீபம் கடமுதலியவற்ருல் விளக்கப்படாததுபோல, ஆத்மா ஜடமாகிய அவற்ருல் விளக்கப்படுகிறதில்லை. (உஅ)

स्वबोधेनान्यबोधेच्छा बोधरूपतयात्मनः ।
न दीपस्यान्यदीपेच्छा यथा स्वात्मप्रकाशने ॥ २९ ॥

(அ-கை.) ஆத்மா, புத்தியகங்காரமுதலியவற்ருல் அறியப்படமாட்டாதெனின், அவ்வாத்மாவை யறிதற்கு இப்புத்திமுதலியவற்றின் ஞானத்திற்கு வேருக ஒருஞானம் வேண்டுமேயென்ருசங்கித்து, அவ்வாறு வேண்டியதில்லை யென்று கூறுகின்ருர் :-

दीपस्य स्वात्मप्रकाशने अन्यदीपेच्छा यथा न (तथा) बोधरूपतया आत्मनः स्वबोधे अन्यबोधेच्छा न ॥

(சு-ம்.) தீபத்திற்குத் தனது சொரூபப்பிரகாசத்தில் வேறு தீபாபேக்ஷை எப்படி வேண்டியதில்லையோ, அப்படிப் போல ஆத்மா, போத(ஞான)வடிவமா யிருத்தலால் தன்னை யறிதலில் அதற்கு வேறுஞானத்தின் அபேக்ஷை யில்லை. (உகூ)

निषिद्ध्य निखिलोपाधीन्नेति नेतीति वाक्यतः ।
विद्यादैक्यं महावाक्यैर्जीवात्मपरमात्मनोः ॥ ३० ॥

(அ-கை.) ஆத்மா புத்திமுதலிய எவ்விந்திரியத்தாலும் அறியப்படமாட்டாது. தீபத்திற் பிரகாசம்போல் அவ்வாத்மாவில் சுவசொரூபஞானம் நித்தியசித்தமா யிருத்தலால் அவ்வாத்மாவை விஷயஞ்செய்தற்கு வேருருஞானம் வேண்டியதில்லை யென்று முன் சுலோகங்க ளிரண்டினுலும் சொல்லப்பட்ட துண்மையே யாயினும், கிருமிகீடமனுஷ்யாதி சகலப்பிராணிகளிடத்தும் சுவசொரூபஞான மிருந்தும் அவற்றிற்கெல்லாம் இது தான் ஆத்மா வென்று ஆத்மசொரூபத்தின் ஞானம் வராமையால் திருஷ்டாந்தமான தீபத்தை இது தீபமென் றறிதற்கு வேறு தீபப்பிரகாசம் வேண்டியதில்லை யாயினும், நேத்திரேந்திரியப்பிரகாசங்கள் வேண்டியிருப்பதுபோலக் கேவலம் சொரூபஞானத்

தினுலே ஆத்மஞானம் வரமாட்டாது. அது பிறிதோர் உபாயத்தினுலேயே வரவேண்டு மென்று சங்கித்து, அதற்குச் சமாதானம் * சச. அதத்வியாவிருத்திபூர்வகமாய்த் தத்துவமஸியாதி மகாவாக்கியார்த்தஜந்யவிருத்தியாகிய பிரஹ்மாத்மசொரூபஞானத்தினுல் ஜீவபரஐக்கியசித்தி யுண்டாமாகலின் அதுவே உபாயமா மென்று வெளிப்படையாய்க் கூறுகின்றார்:—

न इति न इति वाक्यतः निखिलोपाधीन् निषिध्य महावाक्यैः जीवात्मपरमात्मनोः ऐक्यं विद्यात् ॥

(சு-ம்.) இப்படி யன்று இப்படி யன்று என்னுஞ் சுருதி வாக்கியத்தால் அந்தக்கரணுதி சகல உபாதிகளையும் நிஷேதித்து அதாவது தள்ளி * சரு. தத்துவமஸி என்றல் * சசு. முதலிய

* சச. அதத் என்பது பொய்ப்பொருளாகிய அநாத்மபதார்த்தங்கள் வியாவிருத்தி யென்பது அவற்றினின்றும் ஆத்மாவை வேறுபடுத்துவது.

* சரு. தத்=அது; துவம்=நீயாய்; அஸி=இருக்கின்றாய். இவ்வாக்கியத்தில் தத்பதம் ஈசுவரனையும், துவம்பதம் ஜீவனையும், அஸிபதம் இரண்டன் ஏகத்துவத்தை (ஒருமையை) யும் காட்டுகின்றது. அவ்வாறயின் சர்வஞ்ஞத்துவாதி (முற்றறிவுடைமைமுதலிய) தர்மங்களோடு கூடிய ஈசுவரனுக்கும் கிஞ்சிஞ்ஞத்துவாதி (சிற்றறிவுடைமை முதலிய) தர்மங்களோடு கூடிய ஜீவனுக்கும் அபேதம் எப்படிப் பொருந்துமெனின், சர்வஞ்ஞத்துவாதி கிஞ்சிஞ்ஞத்துவாதி தர்மங்கட்குக் காரணமாகிய மாயை அவித்தை யென்னும் உபாதிக ளிரண்டனையும் விட்டுச் சேதனபாகமாத்திரத்திற்கு ஐக்கியங்கூடும். இவ்வாறு வாச்சியார்த்தத்தின் ஒருபாகத்தினை விட்டு ஒருபாகத்தினைக் கொள்ளுதலைப் பாகத்தியாகலக்ஷனை யென்பர். சொல்லிற்குப் பொருளோடுள்ள சம்பந்தத்தினை விருத்தி யென்பர். அந்தவிருத்தி சக்தி லக்ஷணை என்றிருவகைப்படும். சொல்லிற்குப் பொருளோடுள்ள நேர்சம்பந்தம் சக்திவிருத்தி யெனப்படும். பரம்பரைச்சம்பந்தம் இலக்ஷணுவிருத்தி யெனப்படும். அவ்விலக்ஷணையும் விட்டலக்ஷணை விடாதலக்ஷணை பாகத்தியாகலக்ஷணை யென்று மூவகைப்படும். அவற்றுள், பாகத்தியாகலக்ஷணையே மகாவாக்கியார்த்தத்தில் உபயோகமாம்.

* சசு. முதலியவென்னும் சொல்லால் பிரஞ்ஞானம் பிரஹ்மம், அகம் பிரஹ்மாஸ்மி, அயமாத்மா பிரஹ்மமுதலிய வாக்கியங்களும் கொள்ளப்படும். இவற்றை விரிவா யறியவிரும்புவோர் ஸ்ரீ விசாரசந்திரோதயம், ஸ்ரீவிசாரசாகரம், ஸ்ரீ பஞ்சதசியின் உரை, தத்துவமஸிமகாவாக்கியவுபதேசமுதலிய நூல்களிற் காண்க. இங்கு விரிவஞ்சி விடுத்தனம்.

மகாவாக்கியங்களால் இலக்ஷணையினால் ஜீவாத்மபரமாத்மாக்களின் ஐக்கியத்தை அதாவது ஜீவாத்மாவே பரமாத்மா வென்னும் ஒருமையை அறியவேண்டும். (௩0)

आविद्यकं शरीरादि दृश्यं बुद्बुदवत्क्षरं ।
एतद्विलक्षणं विद्यादहं ब्रह्मेति निर्मलम् ॥ ३१ ॥

(அ-கை.) ஆத்மாவை யறிதலில் அதத்வியாவிருத்தி இல்லாவிடிற் குறை யாதென் றுசங்கித்து, ஆரோபிதமான (கற்பிக்கப்பட்ட) சர்ப்பத்தைச் செவ்வையாய் விசாரித்து, இது சர்ப்ப மன்றென்று தள்ளாவிடின், யதார்த்தஞானம் பிறவாததுபோல அதத்வியாவிருத்தியினால் அநாத்மாக்களை நிஷேதிக்காவிடின், ஆத்மா இது வென்னும் ஞானம் பிறக்கமாட்டா தென்று கூறுகின்றார்:—

शरीरादि आविद्यकं दृश्यं बुद्बुदवत् क्षरं एतद्विलक्षणं निर्मलं ब्रह्म अहं इति विद्यात् ॥

(சு-ம்.) தேகேந்திரியாதி வஸ்துக்கள் யாவும் அவித்தியா கற்பிதமாயும், திருசியமாயும், நீர்க்குமிழிபோல் நாசமுடையனவாயு மிருக்கின்றன. இவற்றின் வேறாய் நிர்மலமா யிருக்கின்ற பிரஹ்மம் நானென் றறிக. (அதனால் * சஎ. கிருதகிருத்தியனாகின்றான்.) (௩க)

देहान्यत्वान्न मे जन्मजराकार्श्यलयादयः ।
शब्दादिविषयैः संगो निरिंद्रियतया न च ॥ ३२ ॥

(அ-கை.) இவ்வாறு அத்வைதாநந்தசொரூப ஆத்மாவை மகாவாக்கியார்த்தஞானத்தால் அபரோக்ஷமா யறிந்து, சுவாநுபவப்பற்றினால் ஆத்மாவிலேயே ஆத்மாவின் மனனக்கிரமத்தை ஐந்து சுலோகங்களாற் கூறுகின்றார்:—

* சஎ. செய்யவேண்டியவற்றைச் செய்தவன் கிருதகிருத்தியனெனப்படுவன்.

देहान्यत्वात् मे जन्मजराकार्श्यलयादयः न निरिंद्रियतया शब्दादिविषयैः संगः च न ॥

(சு-ம்) ஜடமும் திருசியமுமாகிய ஸ்தூலதேகத்திற் கந்நியமா யிருத்தலின் எனக்குப் பிறப்பு, மூப்பு, மெலிவு, ஒடுக்க முதலியன இல்லை. இந்திரியாதிகளோடு சம்பந்தமில்லாத தன்மையால் (இந்திரியாதிகளின்) சப்தாதிவிஷயங்களோடு எனக்குச் சம்பந்தமு மில்லை. (௩௨)

अमनस्त्वान्न मे दुःखरागद्वेषभयादयः ।
अप्राणो ह्यमनाः शुभ्र इत्यादि श्रुतिशासनात् ॥ ३३ ॥

(அ-கை) மன மின்மையால் துக்கராகாதிகள் எனக்கில்லை யென்று கூறுகின்றார்:—

अमनस्त्वात् दुःखरागद्वेषभयादयः मे न ॥

(சு-ம்) மனதின் சம்பந்த மின்மையால் துக்கம், ராகம், துவேஷம், பயம் (காமம், சங்கற்பம்) முதலியன எனக் கில்லை.

(அ-கை.) உனக்கு இந்திரியம் பிராணன் மன முதலியன வில்லை யென்பதெப்படி யென்றாசங்கித்துச் சுருதியைப் பிரமாண மாக்குகின்றார் :—

हि अप्राणः अमनाः शुभ्रः इत्यादि श्रुतिशासनात् ॥

(சு-ம்.) *சு-அ. ஆத்மா பிராண னில்லாதது, மன மில்லாதது, பரிசுத்தமானது என்றல்முதலிய சுருதியின் ஆணை யிருத்தலால். (௩௩)

निर्गुणो निष्क्रियो नित्यो निर्विकल्पो निरंजनः ।
निर्विकारो निराकारो नित्यमुक्तोऽस्मि निर्मलः ॥ ३४ ॥

---

* சு-அ. "अप्राणो ह्यमनाश्शुभ्रो ह्यक्षरात्परतःपरः। एतस्माज्जायते प्राणो मनस्सर्वेंद्रियाणि च ॥ खं वायुर्ज्योतिरापश्च पृथ्वी विश्वस्य धारिणी என்பது சுருதி.

(அ-கை.) குருவின் பிரசாதத்தால் சுவாநுபவசித்தமான அர்த்தத்தினை மூன்று சுலோகங்களால் தெரிவிக்கின்றார்:—

निर्गुणः निष्क्रियः नित्यः निर्विकल्पः निरंजनः निर्विकारः निराकारः नित्यमुक्तः निर्मलः अस्मि ॥

(சு-ம்) நான் *சக நிர்க்குணனும், *ருO நிஷ்கிரியனும், (நாசமின்மையால்) நித்தியனும், *ருக. நிர்விகற்பனும், *ருஉ. நிரஞ்சனனும், *ருங. நிர்விகாரனும், *ருச. நிராகாரனும், *ருரு. நித்தியமுக்தனும், நிர்மலனுமிருக்கின்றேன். (ஙச)

अहमाकाशवत्सर्वं बहिरंतर्गतोऽच्युतः ।
सदा सर्वसमः शुद्धो निःसंगो निर्मलोऽचलः ॥ ३५ ॥

(அ-கை.) முற்கூறிய ஏதுக்களாலேயே விசிஷ்டசொரூபம் அறியவேண்டியதாமென்று, கூறவே அவ்விசிஷ்டம் யாதென்று சங்கித்துக் கூறுகின்றார்:—

अहं आकाशवत् सर्वं बहिरंतर्गतः अच्युतः सदा सर्वसमः शुद्धः निस्संगः निर्मलः अचलः ॥

(சு-ம்) நான் ஆகாயம்போல் *ருசு திருசியமெல்லாவற்

* சக. அந்தக்கரணமின்மையால் முக்குணசம்பந்தமில்லாதவன்.
* ருO. இந்திரியங்களில்லாமையால் எச்செய்கையுமில்லாதவன்.
* ருக. மனமின்மையால் எவ்வித விகற்பமுமில்லாதவன்.
* ருஉ. தபசுமுதலிய கருப்பின்மையால் அஞ்சனமில்லாதவன்.
* ருங. பிறப்புமுதலியன இன்மையால் விகாரமில்லாதவன்.
* ருச. நெடுமை குறுமைமுதலியன இன்மையால் ஆகார (வடிவ) மில்லாதவன்.
* ருரு. இயல்பாகவே அவித்தையாதிபாசங்களின்மையால் நித்திய முக்தன்.
* ருசு. யாவும் என்னிடத்து விவர்த்தமாயிருத்தலால் திருசியமுழுவதும் நானே என்பது அபிப்பிராயம்.

றின் வெளியிலும் உள்ளிலு மிருப்பவனாயும், * ௫எ. அச்சுத னாயும், எப்போதும் சர்வசமனாயும், சுத்தனாயும், சங்கமில்லாத வனாயும், மலமின்றியவனாயும், (பூர்ணனா யிருப்பவனுக்குச் சல னமின்மையால்) சலனமின்றியவனாயு மிருக்கின்றேன். (௩௫)

नित्यशुद्धविमुक्तैकमखंडानंदमद्वयम् ।
सत्यं ज्ञानमनंतं यत्परं ब्रह्माहमेव तत् ॥ ३६ ॥

(அ-கை) மறுபடியும் சொரூபத்தை நிரூபிக்கின்றார் :—

नित्यशुद्धविमुक्तैकं अखंडानंदं अद्वयं सत्यं ज्ञानं अनंतं परं ब्रह्म यत् तत् अहं एव ॥

(சு-ம்) நித்தியமாயும், சுத்தமாயும், விமுக்தமாயும், அதி னால் ஏகமாயும், அகண்டாநந்தமாயும், (இரண்டாவதின்மையால்) அத்வயமாயும், ("सत्यं ज्ञानमन्तं ब्रह्म சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்." என்னும் சுருதியினால்) சத்தியமாயும், ஞானமாயும், * ௫அ. அநந்தமாயு முள்ள மேலான பிரஹ்மம் எதுவோ அது நானே. (௩௬)

एवं निरंतराभ्यस्ता ब्रह्मैवास्मीति वासना ।
हरत्यविद्याविक्षेपान् रोगानिव रसायनम् ॥ ३७ ॥

(அ-கை. முற்சுலோகங்களிற் கூறப்பட்ட மனனம் வெகு காலம் அப்பியசிக்கப்பட்டபோது அதுவே * ௫௯. பரமபுரு ஷார்த்தத்தை அடைவிக்கின்றதென்று கூறுகின்றார் :—

एवं ब्रह्म एव अहं अस्मि इति निरंतराभ्यस्ता वासना अविद्याविक्षेपान् रसायनं रोगान् इव हरति ॥

---

* ௫எ. தன்சந்நிதியில் தேகாதிப்பிரபஞ்சம் எத்தனை விகாரத்தை யடையினும் தான் தனது சொரூபத்தினின்று நழுவா திருத்தலால் அச்சு தன்.

* ௫அ. தேசகாலவஸ்துக்களால் பரிச்சேதமில்லாதது அநந்தம். இதன் விரிவைப் பாலபோதமென்னும் நூலின் முதலுபதேசத்திற் காண்க.

* ௫௯. எதற்குமேல் புருஷனால் விரும்பப்படுவதுவேறொன்றில் லையோ அது பரமபுருஷார்த்த மெனப்படும்.

(சு-ம்.) இவ்வாறு பிரஹ்மமே நானென்று நிரந்தரம் அப்பி யசிக்கப்பட்ட வாசனை அவித்தையினுலாகிய *சுo. விக்ஷேபங் களை நீண்டகாலம் புசித்துவரும் *சுக. ரசாயனம் ரோகங்களை அடியோடு கெடுப்பதுபோற் கெடுக்கின்றது. (௩எ)

विविक्तदेश आसीनो विरागो विजितेंद्रियः ।
भावयेदेकमात्मानं तमनंतमनन्यधीः ॥ ३८ ॥

(அ-கை.) பிரஹ்மாநுசந்தானத்தில் சாதனமான நியமங் களைக் கூறுகின்றார் :—

विविक्तदेशे आसीनः विरागः विजितेंद्रियः अनन्यधीः अनंतं एकं आत्मानं भावयेत् ॥

(சு-ம்.) சாதகன் ஜனங்களின்றிய தனியிடத்தில் சுகமா யிருந்துகொண்டு, இராகமொழிந்தவனுய், அதனுல் இந்திரியங் களை ஜயித்தவனுய், *சுஉ. அந்நியபுத்தி யில்லாதவனுய் அநந்த மும் ஏகமுமாகிய அவ்வாத்மாவைத் தியானிக்கக்கடவன். (௩அ)

आत्मन्येवाखिलं दृश्यं प्रविलाप्य धिया सुधीः ।
भावयेदेकमात्मानं निर्मलाकाशवत्सदा ॥ ३९ ॥

(அ-கை.) திருசியம் தோற்றும் ஜாக்கிரத்தில் ஏகத்துவ பாவனை எவ்வாறு கூடுமெனக் கூறுகின்றார் :—

सुधीः धिया अखिलं दृश्यं आत्मनि एव प्रविलाप्य एकं आत्मानं निर्मलाकाशवत् सदा भावयेत् ॥

(சு-ம்.) நற்புத்தியுடையோன் புத்தியினுல் சகல திருசியத் தினையும் ஆத்மாவினிடத்திற்றனே மிக வொடுக்கி அதாவது சமாதிகாலத்தில் அதிஷ்டானத்தைவிட ஆரோப்பிய மில்லை

* சுo. ஸ்தூலசூக்ஷ்மாதிப்பிரபஞ்சமும் அதன் ஞானமும் விக்ஷேப மெனப்படும்.

* சுக. ரசாயனம்—மருந்து.

* சுஉ. பிரஹ்மத்தில் மாத்திரம் நிச்சயமுள்ள புத்தியுடையவனுய்

யென்று செவ்வையாய் நிச்சயித்து (இரண்டாவதில்லாமையால்) ஏகமாகிய ஆத்மாவினை நிர்மலமான ஆகாயம்போல எப்போதும் பாவிக்கக்கடவன். (௩௯)

रूपवर्णादिकं सर्वं विहाय परमार्थवित् ।
परिपूर्णचिदानंस्वरूपेणावतिष्ठते ॥ ४० ॥

(அ-கை.) *சுரு. பரமார்த்தஞானியான முநி நாமரூபாதி அஞ்ஞானகாரியங்களெவற்றையுங் கொள்ளாது விட்டு, எப்போதும் பரிபூரண சிதாநந்தப்பிரஹ்மசைதந்யமாகவே நிலைத்திருப்பனென்று கூறுகின்றார் :—

परमार्थवित् रूपवर्णादिकं सर्वं विहाय परिपूर्णचिदानन्दस्वरूपेण अवतिष्ठते ॥

(சு-ம்.) பரமார்த்தமுணர்ந்தவன் ரூபம் வர்ணமுதலிய எல்லாவற்றையும் விட்டுப் பரிபூரணசிதாநந்தசொரூபயாக நிலைக்கின்றான். (௪0)

ज्ञातृज्ञानज्ञेयभेदः परात्मनि न विद्यते ।
चिदानंदैकरूपत्वाद्दीप्यते स्वयमेव हि तत् ॥ ४१ ॥

(அ-கை.) அப்படியானால் பிரமாதாமுதலிய திரிபுடி-ஞானமிருப்பதாகக் காணப்படுதலின் ஏகத்துவபாவனை எப்படிக் கூடுமென்றுசங்கித்துப் பரமாத்மாவில் அப்பேதமில்லையென்று கூறுகின்றார் :—

ज्ञातृज्ञानज्ञेयभेदः परात्मनि न विद्यते चिदानंदैकरूपत्वात् तत् स्वयं एव दीप्यते ॥

(சு-ம்.) ஞாதிருஞானஞேயபேதம் பரமாகிய ஆத்மாவில் இல்லை. சிதாநந்தைகரூபமாயிருத்தலால் அவ்வாத்மா தானே பிரகாசிக்கின்றது.

---

* சுரு. பரமார்த்தஞானி=மெய்ப்பொருளுணர்ந்தவன்.

(வி-ம்.) * ௬௪. ஞாதிருஞானஞேயமென்னும் திரிபுடியின் பேதம் பரமாத்மாவினிடத்தி லில்லை. அஃது அவித்தியாகற்பிதமாய் ஆத்மாவினிடத்திலேயே தோற்றுகின்றது. சிதாநந்த ஏகரூபமா யிருத்தலால் ஆத்மா தானுகவே விளங்குகின்றது. (௪௫)

एवमात्मारणौ ध्यानमथने सततं कृते ।
उदितावगतिर्ज्वाला सर्वाज्ञानेंधनं दहेत् ॥ ४२ ॥

(அ-கை.) இவ்வாறு சுத்தசைதந்யமாகிய ஆத்மாவைத் தியானம்பண்ணுகிறவனது ஞானத்தின் பலத்தைக் கூறுகின்றார்:-

एवं आत्मारणौ ध्यानमथने सततं कृते उदिता अवगतिः ज्वाला सर्वाज्ञानेंधनं दहेत् ॥

(சு-ம்.) இவ்வாறு ஆத்மாவாகிய (அந்தக்கரண)வரணியில் தியானமதனம் இடைவிடாது செய்தபோது உதயமான ஞானக்கினி சகல அஞ்ஞான இந்தனத்தையும் தகிக்கும்.

(வி-ம்.) இவ்வாறு ஆத்மாவாகிய அந்தக்கரணமென்னும் * ௬௫. அரணியில் தியானமாகிய கடைதலை இடைவிடாது செய்ய உதயமாகிய அபரோக்ஷஞானக்கினியானது சகல அஞ்ஞானமாகிய * ௬௬. இந்தநத்தையும் எரிக்கும். அதனுல் முமுக்ஷு சுவாராஜ்பாபிஷேகஞ் செய்யப்பட்டவனுய்க் கிருதகிருத்தியனுகின்றுன் என்பது பொருள். (௪௨.)

अरुणेनेव बोधेन पूर्वं संतमसे हृते ।
तत आविर्भवेदात्मा स्वयमेवांशुमानिव ॥ ४३ ॥

---

* ௬௪. ஞாதிரு=அறிகிறவன். ஞானம்=அறிவு. ஞேயம்=அறியப்படுபொருள்.

* ௬௫. பலாசுமுதலிய மாக்கட்டைகளைக் கீழொன்றும் மேலொன்றுமாக வைத்துக் கடைந்தால் அக்கினி வெளிப்படும். அக்கட்டையினை அரணிக்கட்டை யென்பர்.

* ௬௬. இந்தனம்—விறகு.

(அ-கை.) ஜீவபரமாத்ம ஐக்கியஞானத்தால் அவித்தியா கற்பிதமான *௬௭. தமசானது அடியோடு நீங்கவே பரமாத்மா தாமாகவே விளங்குவ ரென்று கூறுகின்றார் :—

अरुणेन इव बोधेन पूर्वं संतमसे हृते ततः अंशुमान् इव आत्मा स्वयं एव आविर्भवेत् ॥

(சு-ம்) அருணோதயத்திற்போல ஞானத்தால் முன்னர் அஞ்ஞானமாகிய இருள் கெடுக்கப்படின், அதன்பின் சூரியனைப் போல ஆத்மா தானாகவே ஆவிர்ப்பவிக்கின்றது அதாவது வெளிப்படுகின்றது. (௪௩.)

आत्मा तु सततं प्राप्तोऽप्यप्राप्तवदविद्यया ।
तन्नाशे प्राप्तवद्भाति स्वकंठाभरणं यथा ॥ ४४ ॥

(அ-கை.) ஆத்மா *௬௮. நித்தியாபரோக்ஷமா யிருக்க, அது முன்னடையப்படாததாய் இப்போது அடையப்பட்ட தென்ப தெவ்வாறென் றாசங்கித்துக் கூறுகின்றார் .—

आत्मा सततं प्राप्तः अपि अविद्यया अप्राप्तवत् तन्नाशे स्वकंठाभरणं यथा (तथा) प्राप्तवत् भाति ॥

(சு-ம்.) ஆத்மா எப்போதும் அடையப்பட்டதாயினும், அவித்தையினால் அடையப்படாததைப் போலிருக்கின்றது. அவ்வவித்தை கெட்டபோது தனது கண்டத்தின் ஆபரணம் போல அடையப்பட்டதுபோல் விளங்குகின்றது.

(வி-ம்.) ஆத்மா எங்கும் நிறைந்திருத்தலாலும், அத்வயாநந்தவடிவமா யிருத்தலாலும், அந்தக்கரணவிருத்தியின் சாக்ஷியாக எப்போதும் அடையப்பட்டதா யிருக்கினும் அவித்தையினால் அடையப்படாததுபோன் றிருக்கின்றது. அவ்வவித்தை நாசமா

---

* ௬௭. இருள் பதார்த்தங்களை மறைத்தல்போல் அஞ்ஞானம் மெய்ப் பொருளை மறைத்தலால் தமசு (இருள்) எனப் படுகின்றது.

* ௬௮. என்றும் கெடாது பிரத்தியக்ஷமா யிருப்பது எதுவோ அது நித்தியாபரோக்ஷ மெனப்படும்.

கியகாலத்துத் தனது *௬௬: கழுத்திஞபரணம்போல அடையப் பட்டதாக விளங்குகின்றது. (௪௪)

स्थाणौ पुरुषवद्भ्रांत्या कृता ब्रह्मणि जीवता ।
जीवस्य तात्त्विके रूपे तस्मिन् दृष्टे निवर्तते ॥ ४५ ॥

(அ-கை.) ஜீவனுக்குப் பரமாத்மாவோடு ஏகத்துவம் கூடாது; ஜீவத்தன்மைவடிவ விரோத மிருத்தலின்; உலகத்தில் சுபாவகுணத்திற்குப் பரிகார மின்மையா லென்றுசங்கித்துச் சமாதானஞ்செய்கின்ருர்:—

स्थाणौ पुरुषवत् ब्रह्मणि जीवता भ्रांत्या कृता जीवस्य तस्मिन् तात्त्विके रूपे दृष्टे निवर्तते ॥

(சு-ம்.) தாணுவில் புருஷனைப்போலப் பிரஹ்மத்தில் ஜீவத் தன்மை பிராந்தியினுல் செய்யப்பட்டதாம். ஜீவனது அவ்வுண் மைவடிவம் அறியப்பட்டபோது அது நீங்குகின்றது.

(வி-ம்.) *௭0. தாணுவிற் புருஷனைப்போலப் பிரஹ்மத்தில் ஜீவத்தன்மை பிராந்தியினுல் கற்பிக்கப்படுகின்றது. அது (ஜீவத்துவம்) ஜீவனது அந்த உண்மைவடிவமாகிய *௭௧. கூடஸ்தபிரஹ்மசொரூபத்தைக் கண்டகாலத்துக் கற்பிதமா யிருத்தலால் நீங்குகிறது. ஆதலால் இரண்டுவடிவ மிருத்தலால் விரோத மில்லை யென்பது பொருளாம். (௪௫)

* ௬௬. ஒரு ஸ்திரீயானவள் ஜலத்தில் ஸ்நானஞ்செய்தகாலத்துத் தன் கழுத்திலணிந்துள்ள ஆபாணத்தை மறதியினுற் காணுததாகத் தேடி மற்ருெருத்தி உன்கழுத்தி லணிந்திருக்கின்ருயே யென்று கூறக் கண்டு நகை கிடைத்ததாகச் சந்தோஷமடைவதுபோல, அஞ்ஞானத்தினுல் இழந்த தாயுள்ள ஆத்மாவை ஆப்தவாக்கியத்தால் அவ்வஞ்ஞானம் நசித்தகாலத்து அடைந்ததாகக் காண்கிருன். இந்தத் திருஷ்டாந்தத்தினைக் கண்டபூஷ ணநியாய மென்றும், கண்டசாமீகரநியாய மென்றும் கூறுவர்.

* ௭0. தாணு = கட்டை. இருளிலுள்ள கட்டையில் புருஷன் இவ னென்று திருடர்முதலிய சங்கையால் பயப்படுகின்ருன். அதுபோல வென்னும் இதனை ஸ்தாணுபுருஷநியாய மென்பர்.

* ௭௧. பிரத்தியகாத்மா கொல்லனுலைக்கூடத்தைப்போலத் தன்னிடத்து எத்தனை வியவகாரங்கள் நடந்தாலும் தனக்கொரு விகாரமு மின்றி யிருத்தலால் கூடஸ்த னெனப்படுகின்றது.

तत्त्वस्वरूपानुभवादुत्पन्नं ज्ञानमंजसा ।
अहं ममेति चाज्ञानं बाधते दिग्भ्रमादिवत् ॥ ४६ ॥

(அ-கை.) யான் என தென்று தோற்றும் ஜாக்கிரத்திற்ருனே யான் என தென்னும் ஞானம் இல்லாமற்போமோ வென்ருசங்கித்து, அவ்வாருயினும் ஞானம் வந்தபோது இல்லாமற்போமென்று கூறுகின்ருர் :—

तत्त्वस्वरूपानुभवात् उत्पन्नं ज्ञानं अहं मम इति च अज्ञानं दिग्भ्रमादिवत् अंजसा बाधते ॥

(சு-ம்.) * எ-உ. தத்துவசொரூபாநுபவத்தா லுண்டாகிய ஞானம் இரவில் உண்டாகிய திக்குப்பிரமமுதலியவற்றைச் சூரியோதயமானது கெடுப்பதுபோல யான் என தென்னும் அஞ்ஞானத்தை விரைவிற் கெடுக்கின்றது. (சசு)

सम्यग्विज्ञानवान् योगी स्वात्मन्येवाखिलं स्थितम् ।
एकं च सर्वमात्मानमीक्षते ज्ञानचक्षुषा ॥ ४७ ॥

(அ-கை.) இத்தன்மைய யானென தென்னும் உணர்ச்சி நீங்கிய மகாபுருஷன் விஞ்ஞானதிருஷ்டியால் சகலதிருசியங்களையும் தனது ஆத்மாவாகவே பார்ப்பனென்று கூறுகின்ருர் :—

सम्यग्विज्ञानवान् योगी ज्ञानचक्षुषा स्वात्मनि अखिलं एव स्थितं सर्वं एकं आत्मानं च ईक्षते ॥

(சு-ம்.) அபரோக்ஷஞானமுடைய யோகி ஞானதிருஷ்டியிஞல் தனது ஆத்மாவிலேயே சகல ஜகத்து மிருக்கின்ற தென்று எல்லாவற்றையும் ஏகமான ஆத்மா வென்று காணுகின்ருன். (அப்போது கிருதகிருத்தியனுகின்ருன் என்பது பொருள்.) (சஎ)

आत्मैवेदं जगत्सर्वमात्मनोन्यन्न किंचन विद्यते ।
मृदो यद्वद्घटादीनि स्वात्मानं सर्वमीक्षते ॥ ४८ ॥

* எ-உ. தத்துவசொரூபம்=உண்மைவடிவம். அநுபவம்=உணர்ச்சி.

(அ-கை.) நாநாவிதமாயிருக்கின்ற இவ்வளவு திருசியப்பிரபஞ்சங்களேயும் ஆத்மாவில் எப்படி அபேதமாகக் காண்பானென்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

इदं सर्वं जगत् आत्मा एव आत्मनः अन्यत् किंचन न विद्यते यद्वत् मृदः घटादीनि सर्वं स्वात्मानं ईक्षते ॥

(சு-ம்.) இவ்வெல்லாஜகத்தும் ஆத்மாவே ஆத்மாவிற்கந்நியம் சிறிது மில்லே; மண்ணினும் கடமுதலியன வேறாகாதது போல. இதனால் எல்லாவற்றையும் தனது ஆத்மாவாகக் காண்கிறான்.

(வி-ம்.) இவ்வெல்லாஜகத்தும் ஆத்மாவே ; ஆத்மாவிற்கந்நியமானது சிறிது மில்லே; *எங. குடமுலியன மண்ணேவிட வேறாகாததுபோல். இதனால் எல்லாவற்றையும் தனது ஆத்மாவாகக் காண்கின்றான்; "वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् நாமதேயமான விகாரம் வாக்கின் காரியமாத்திரமாம்; மண்மாத்திரமே சத்தியமாம்." என்னும் சுருதியினால். (சஅ)

जीवन्मुक्तिस्तु तद्विद्यात्पूर्वोपाधिगुणांस्त्यजेत् ।
सच्चिदादिधर्मत्वाद्भजेद् भ्रमरकीटवत् ॥ ४९ ॥

(அ-கை.) இவ்வித நிஸ்ஸங்கமான (சம்பந்தமில்லாத) நிலைமையே ஜீவன்முக்தி யென்று கூறுகின்றார் :—

पूर्वोपाधिगुणान् त्यजेत् तत् जीवन्मुक्तिः विद्यात् सः सच्चिदादिधर्मत्वात् भ्रमरकीटवत् भजेत् ॥

---

* எங. மண்ணிற் காணப்படும் குடம் சால்முதலியவற்றை அவையும் மண்ணேவிட வேறாகா வென்று காண்பதுபோல, ஆத்மாவினிடத்துக் காணப்படும் இவ்வெல்லாப்பிரபஞ்சமும் ஆத்மாவே யென்று காண்பதுதான் பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்கும்போதே அப்பிரபஞ்சத்தையும் ஆத்மாவையும் அபேதமாய்க் காண்டலாம்.

(சு-ம்.) முந்திய உபாதிகுணங்களை விடவேண்டும். அது ஜீவன்முக்தியென்று அறிக. அவன் சத்து சித்துமுதலிய தர்மத் தன்மையால் பிரமரகீடம்போல் அடைகிறான்.

(வி-ம்.) அவ்வாத்மஞானி அநாதி அவ்வித்தியாகற்பித முன் உபாதிகளான தேகம் மனம் புத்திமுதலியவற்றையும் சத்துவாதி குணங்களையும் யான் அல்லன் என்று விடவேண்டும். அதனை ஜீவன்முக்தியென்று அறிக. அந்த ஜீவன்முக்தன் சச்சிதாநந்த தர்ம மிருத்தலால் * ௪௯. பிரமரகீடம்போல் பிரஹ்மத்தை யடைகின்றான் என்பது பொருள். (௪௯)

तीर्त्वा मोहार्णवं हत्वा रागद्वेषादिराक्षसान् ।
योगी शांतिसमायुक्तो ह्यात्मारामो विराजते ॥ ५० ॥

(அ-கை.) அதன்பின் யோகி தனது ஆத்மாவில் இரமிப்பவனாய்ச் சுகமாயிருப்பானென்று கூறுகின்றார் :—

मोहार्णवं तीर्त्वा रागद्वेषादिराक्षसान् हत्वा योगी शांतिसमायुक्तो आत्मारामः विराजते ॥

(சு-ம்.)*௫௦. மோகமாகிய சமுத்திரத்தை ஞானமாகிய அணையினால் கடந்து ராகத்துவேஷாதிராக்ஷதர்களைக் கொன்று யோகியானவன் சாந்தியோடுகூடினவனாய் ஆத்மாராமனாக விளங்குகின்றான். (௫௦)

---

* ௪௯. பிரமரமாகிய குளவியானது கீடமாகிய புழுவினைக் கொண்டுவந்து தனது கொடுக்கால் கொட்டிக் கூட்டி லடைத்துவிடுகிறது. அப்புழுவானது தன்னைக் கொட்டிய அக்குளவியினை நினைத்துக்கொண்டே யிருத்தலால் அக்குளவிவடிவ மாகின்றது. இதனையே பிரமரகீடநியாய மென்பர்.

*௫௦. ஆத்மாவை இராமனாக உருவகஞ்செய்தமையால் இங்கே அஞ்ஞானம் சமுத்திரம். அதனைக் கடத்தற்கு ஞானம் சேது (அணை). ராகத்துவேஷாதிகள் இராக்ஷதர். ஆத்மா அசங்க னென்னும் விசேஷஞானம் பாணம். சமதமாதிகளுடைய புத்தி சீதை. மைத்திரிகருணையாதிகள் விபீஷணர் சுக்ரீவன் ஹநுமான்முதலியோர். விசுத்தசத்துவகுணம் சுவேதசத்திரம் (வெண்குடை). ராஜயோகசமாதி புஷ்பகவிமானம். இருதயாகாசம் அயோத்தி.

बाह्यानित्यसुखासक्तिं हित्वाऽऽत्मसुखनिर्वृतः ।
घटस्थदीपवत् सोपि स्वांतरेव प्रकाशते ॥ ५१ ॥

(அ-கை.) ஜீவன்முக்தனது இலக்கணத்தைக் கூறுகின்றார்:-

सः अपि बाह्यानित्यसुखासक्तिं हित्वा आत्मसुखनिर्वृतः घटस्थदीपवत् स्वांतः एव प्रकाशते ॥

(சு-ம்.) முற்கூறிய மகாராஜயோகியானவன் * ௭௬. பாகியமாயும் அநித்தியமாயுமுள்ள விஷயசுகத்தில் ஆசையை விட்டு ஆத்மசுகத்தால் * ௭௭. சந்துஷ்டனுய்க் குடத்தினுள்ளிருக்கும் தீபம்போல் சொச்சமாய்த் தன்னுள்ளேயே பிரகாசிக்கின்ருன். (ஆத்மாநுபவசுகம் தனது சாக்ஷிக்கே விஷயம், பிறரா லறியத் தக்கதன் றென்பது பொருள்.) (௫௧)

उपाधिस्थोऽपि तद्धर्मैरलिप्तो व्योमवन्मुनिः ।
सर्वविन्मूढवत्तिष्ठेदसक्तो वायुवच्चरेत् ॥ ५२ ॥

(அ-கை.) முற்கூறியபடி ஜீவன்முக்தாநுபவமுள்ள யோகி * ௭௮. பிராரப்தகர்மக்ஷயபரியந்தம் எவ்வாறு இருக்கவேண்டுமென்று சிஷ்யன் கேட்கக் கூறுகின்ருர் :—

मुनिः उपाधिस्थः अपि व्योमवत् तद्धर्मैः अलिप्तः सर्ववित् मूढवत् असक्तः वायुवत् चरेत् ॥

(சு-ம்.) முநியானவன் உபாதிகளிலிருப்பவனுயினும், ஆகாயம்போல் அவற்றின் தர்மங்களால் பற்றப்படாதவனு யிருப்பன். எல்லாமுணர்ந்தவனுயினும் மூடனைப்போல் இருப்பன். எவ்விஷயத்திலும் பற்றில்லாதவனுய் வாயுவைப்போல் சரிப்பன்.

---

* ௭௬. பாகியம்—வெளியிலுள்ளது.

* ௭௭. திருப்தியடைந்தவனுய்.

* ௭௮. ஜன்மாந்தரங்களினுற் சேர்க்கப்பட்டுள்ள கர்மம் சஞ்சிதகர்மமாம். இந்தச் சன்மத்தில் செய்யப்பட்டு வரும் கர்மம் ஆகாமியம். இவ்வுடலின் ஆரம்பத்திற்குக் காரணமான கர்மம் பிராரப்தம்.

(வி-ம்.) ஞானியாகிய முனி தேகமுதலிய உபாதிகளின் கண் அவற்றின் சாக்ஷியா யிருப்பவனாயினும், ஆகாயம்போல் அவற்றின் பருமன்முதலிய தர்மங்களால் பற்றப்படான். சர்வஞ்ஞனாயிருந்தும் மூடனைப்போ லிருப்பன். வலிய வந்த எதன்கண்ணும் பற்றில்லாது வாயுவைப்போல் சஞ்சரிப்பன். (௫௨.)

उपाधिविलयाद्विष्णौ निर्विशेषं विशेन्मुनिः ।
जले जलं वियद्व्योम्नि तेजस्तेजसि यथा ॥ ५३ ॥

(அ-கை.) பிராரத்தகர்மம் நசித்து ஸ்தூலசூக்ஷ்மசரீரோபாதிகள் நஷ்டமான பின் * ௭௯. விதேககைவல்யத்தை யடைகின்றானென்று கூறுகின்றார் :—

मुनिः उपाधिविलयात् विष्णौ निर्विशेषं यथा जले जलं व्योम्नि वियत् तेजसि तेजः (तथा) विशेत् ॥

(சு-ம்) முநியானவன் உபாதியினீக்கத்தால் விஷ்ணுவினிடத்து நிர்விசேஷமாக, எப்படி ஜலத்தில் ஜலமும் ஆகாயத்தில் ஆகாயமும் அக்கினியில் அக்கினியும் பிரவேசிக்கிறதோ அப்படிப் பிரவேசிக்கிறான்.

(வி-ம்.) பிராரப்தகர்மநீக்கமாகிய உபாதிநாசத்தில் சர்வவியாபகமாகிய பரமாத்மாவில் * ௮௦. நிர்விசேஷமாகப் பெரிய தடாகஜலத்தில் கடவுபாதி நீங்கிய ஜலமும், மகாகாயத்தில் கடவுபாதி நீங்கிய ஆகாயமும், மகாதேயுவில் பொறிவடிவ தேயுவும் பிரவேசிப்பதுபோல ஆத்மாவும் பிரவேசிக்கின்றான் என்பது பொருள். (௫௩)

* ௭௯. ஜீவித்திருக்கும் போதுண்டாகும் முத்தி ஜீவன்முத்தி. தேக நீங்கிய பின்னுண்டாம் முத்தி விதேகமுத்தி. இதனையே விதேககைவல்ய மென்பர்.

* ௮௦. பேதமில்லாமை நிர்விசேஷமாம்.

यल्लाभान्नापरो लाभो यत्सुखान्नापरं सुखम् ।
यज्ज्ञानान्नापरं ज्ञानं तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ५४ ॥

(அ-கை.) பிரஹ்மம் * அக. சர்வாதிசயவஸ்துவாகையால் * அஉ. தடஸ்தலக்ஷணத்தால் அதனை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார் :—

यल्लाभात् अपरः लाभः न यत्सुखात् अपरं सुखं न यज्ज्ञानात् अपरं ज्ञानं न तत् ब्रह्म इति अवधारयेत् ॥

(சு-ம்.) எதன் லாபத்தைவிட வேறு லாப மில்லையோ, எதன் சுகத்தைவிட வேறு சுக மில்லையோ, எதன் ஞானத்தை விட வேறுஞான மில்லையோ, அது பிரஹ்மம் என்று நிச்சயஞ் செய்யவேண்டும்.

(வி-ம்.) சகல லாபங்களும் அதன்கண்ணே யடங்குத லால் எந்தப் பிரஹ்மசாக்ஷாத்காரத்தின் லாபத்தைவிட வேறு லாபமில்லையோ * அச. நிரதிசயசுகமா யிருத்தலால் எந்தப் பிரஹ்மாநுபவசுகத்தைப் பார்க்கினும் வேறு சுக மில்லையோ, ஒரு ஞானமே பரமபுருஷார்த்தமாகிய மோக்ஷகாரணமா யிருத்தலால் எந்தப் பிரஹ்மசாக்ஷாத்காரஞானத்தினும் வேறு ஞான மில்லையோ, அது பிரஹ்ம மென்று நிச்சயிக்கவேண்டும். (௫௪)

यद्दृष्ट्वा नापरं दृश्यं यद्भूत्वा न पुनर्भवः ।
यज्ज्ञात्वा नापरं ज्ञेयं तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ५५ ॥

* அக. எதனின் அதிகரித்த வஸ்து வேறில்லையோ அது சர்வாதிசயவஸ்துவாம்.

* அஉ. எது தனது ஆசிரயத்தில் ஒருகாலத்திருப்பதாய்த் தனது ஆசிரயத்தைப் பிறவற்றினின்றும் வேறுபிரித்தறிவிப்பதா யிருக்கிறதோ அது தடஸ்தலக்ஷண மெனப்படும். அது காகம் தனது ஆசிரயமாகிய தேவதத்தனது வீட்டில் ஒருகாலத்திருப்பதாய்த் தனது ஆசிரயமாகிய அவ்வீட்டைப் பிறவீடுகளினின்றும் வேறுபிரித்தறிவிப்பதா யிருத்தல் போலவாம்.

* அச. நிரதிசயம் = தன்னினும் அதிகரித்த தொன்றில்லாதது.

(அ-கை.) இதுவுமது.

यत् दृष्ट्वा दृश्यं अपरं न यत् भूत्वा पुनः भवः न यत् ज्ञात्वा ज्ञेयं अपरं न तत् ब्रह्म इति अवधारयेत् ॥

(சு-ம்.) எதைக் காண்பதனுல் காணத்தக்கது வேறில்லையோ, எஃது உண்டாவதனுல் மறுபடியும் உற்பத்தியில்லையோ, எதை அறிதலால் அறியத்தக்கது வேறு இல்லையோ, அது பிரஹ்மமென்று நிச்சயிக்கவேண்டும்.

(வி-ம்.) அதனுலேயே புருஷார்த்தம் சமர்த்திக்கப்படுதலால் எதைப் பார்ப்பதனுல் பார்க்கத்தக்கது வேறில்லையோ, எது உண்டாவதனுல் மறுபடியும் உற்பத்திமுதலியன வில்லையோ, எதன் சொரூபத்தை யறிதலால் அறியத்தக்கது வேறில்லையோ, அதுவே பிரஹ்மமென்று நிச்சயிக்கவேண்டும். மற்றவை யாவும் வீணன பண்டிதத்தன்மையாம் என்பது பொருள். (ரு௫)

तिर्यगूर्ध्वमधः पूर्णं सच्चिदानंदमद्वयम् ।
अनंतं नित्यमेकं यत्तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ५६ ॥

(அ-கை) குறுக்கும் மேலும் கீழும் எங்கும் பிரஹ்மமே நிறைந்திருக்கிறதென்று கூறுகின்றார் ;—

तिर्यक् ऊर्ध्वं अधः पूर्णं सच्चिदानंदं अद्वयं अनंतं नित्यं एकं यत् तत् ब्रह्म इति अवधारयेत् ॥

(சு-ம்) குறுக்கும் மேலும் கீழும் நிறைந்ததாய்ச் சச்சிதாநந்தமாய் அத்வயமாய் அநந்தமாய் நித்தியமாய் ஏகமா யிருப்பது எதுவோ அது பிரஹ்மமென்று நிச்சயிக்கவேண்டும். (ருசு.)

अतद्व्यावृत्तिरूपेण वेदांतैर्लक्ष्यते स्वयम् ।
अखंडानंदमेकं यत्तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ५७ ॥

(அ-கை.) அத்வயமும், அகண்டாநந்தமும், ஏகமுமாயுள்ள தெதுவோ அது பிரஹ்மமென்று அதத்வியாவிருத்தி

செய்யும் வேதாந்தவாக்கியங்களில் அதத்துக்களை (பொய்ப் பொருள்களை) நீக்குதல்வாயிலாக அறியதக்கதா மென்று கூறு கின்றார் :—

अतद्व्यावृत्तिरूपेण वेदांतैः अखंडानंदं एकं यत् स्वयं लक्ष्यते तत् ब्रह्म इतिअवधारयेत् ॥

(சு - ம்.) அதத்வியாவிருத்திவடிவ வேதாந்தங்களால் அகண்டாநந்தமும் ஏகமுமாயுள்ள எது தானே *அரு. இலக்ஷி யிக்கப்படுகின்றதோ, அது பிரஹ்ம மென்று நிச்சயிக்க வேண்டும். (ருஎ)

अखंडानंदरूपस्य तस्यानंदलवाश्रिताः ।
ब्रह्माद्यास्तारतम्येन भवंत्यानंदिनोऽखिलाः ॥ ५८ ॥

(அ-கை.) அப்படியானால் பிரஹ்மாமுதலியோர் நிரதிசய சுகமுடையவராகச் சாஸ்திரங்களிற் கேட்கப்படுகின்றனர். அவர் களுலகத்தை விரும்பியவர்கள் அசுவமேதாதிகளைச் செய்கின்ற னராகலின் அவர்களுக்கும் பிரஹ்மத்துவம் பொருந்தா தென்று சங்கித்து, அவை யாவும் உலகத்தில் சொற்ப சம்பத்துள்ள ஒரு வனை நீ மகாராஜ னென்று சொல்வதுபோல உபசாரவாக்கியங்க ளாதலின் பிரஹ்மாதியரின் சுகம் என்றும் நிரதிசயசுக மாகாது, *அசு. சாதிசயசுகமேயாம் என்று கூறுகின்றார்:—

तस्य अखंडानंदरूपस्य आनंदलवाश्रिताः ब्रह्माद्याः अखिलाः तारतम्येन आनंदिनः भवन्ति ॥

(சு-ம்.) அவ்வகண்டாநந்தவடிவ சமுத்திரத்தின் *அஎ. ஆநந்த

---

*அரு. இலக்ஷணையினலறியப்படுவதும்.

*அசு. சாதிசயம் = தன்னினும் அதிகரித்த தொன்றனையுடையது

*அஎ. ஆநந்தலேசம் = இன்பத்துளி.

லேசத்தை *அஅ. ஆசிரயித்துப் பிரஹ்மாமுதலியோர் யாவரும் *அகூ. தாரதம்மியமாக ஆநந்தமுடையவ ராகின்றனர்.(ருஅ)

तद्युक्तमखिलं वस्तु व्यवहारश्चिदन्वितः ।
तस्मात्सर्वगतं ब्रह्म क्षीरे सर्पिरिवाखिलं ॥ ५९ ॥

(அ-கை) ஆத்மா * கூ0. பரமப்பிரீதிக்கு விஷயமா யிருக்கத் தேகாதிப்பிரபஞ்சத்தில் பிரீதியுண்டாவ தென்னை யென்றுசங்கித்துச் சகலப்பிரபஞ்சமும் அவ்வாநந்தவடிவப்பிரஹ்மத்தோடு கூடியிருத்தலால் பிரீதி யுண்டாகின்றதென்று கூறுகின்றார் :—

अखिलं वस्तु तद्युक्तं व्यवहारः चिदन्वितः । तस्मात् ब्रह्म क्षीरे सर्पिः इव सर्वगतं अखिलम् ॥

(சு-ம்.) சகலவஸ்துக்களும் அதனோடு கூடியனவாம். வியவகாரம் சித்தோடு கூடியதாம். ஆதலால் பிரஹ்மம் பாலில் நெய்யினைப்போல எல்லாவற்றினும் இருப்பதாம். அதனால் யாவும் பிரியமாம்.

(வி-ம்.) சகல தேகாதியநாத்மவஸ்துக்களும் அவ்வாநந்த வடிவப்பிரஹ்மத்தோடு கூடியனவாம், அதனாலேயே பிரியகரமாம். சகல இலௌகிகவியவகாரமும் சித்தோடு கூடியிருத்தலால் பிரியமாம். ஆதலால் எல்லாவற்றினு மிருக்கும் பிரஹ்மம் பிரியதமமாம். பாலில் வியாபித்திருக்கும் நெய்யினைபோல யாவும் அவஸ்துவாயினும், அவற்றில் பிரஹ்மம் வியாபித்திருத்தலின் பிரியம்போல் காணப்படுகின்றன. ஆத்மாவே பிரியம் என்பது சித்தித்தது. (ருகூ)

अनण्वस्थूलमन्हस्वमदीर्धमजमव्ययम् ।
अरूपगुणवर्णाख्यं तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ६० ॥

---

* அஅ. ஆசிரயித்து—பற்றி—இடமாகக்கொண்டு.

* அகூ. தரம்—ஒன்றைவிட அதிகம் அல்லது குறைவு. தமம் – எல்லாவற்றையும் விட அதிகம் அல்லது குறைவு. அவற்றின் றன்மை தாரதம்மிய மெனப்படும்.

* கூ0. எல்லாவற்றினும் அதிகப்பிரியம் எதனிடத்தி லுண்டாகின்றதோ அது பரமப்பிரீதிக்கு விஷய மெனப்படும்.

(அ-கை.) ஆத்மா எல்லாவற்றினும் வியாபித்திருக்கிற தென் றறிவதெவ்வா றென்றாசங்கித்து, அஃது இத்தன்மைய தென்று நேராய்ச் சொல்லக்கூடாமையால், அணுவல்லாதது ஸ்தூலமல்லாதது என்றல்முதலிய சுருதியால் அதத்துக்களை நீக்குதல்வாயிலாக நிஷேதமுதலியவற்றிற்குக் காரணவடிவமான சத்துமாத்திரம் பிரஹ்மமென்று அறியவேண்டுமென்று சொல்லுகின்றார்:—

(यत्) अनणवस्थूलं अह्रस्वं अदीर्घं अजं अव्ययं अरूपगुणवर्णाख्यं तत् ब्रह्म इति अवधारयेत् ॥

(சு-ம்.) எது *௧௧. அணுவல்லாததும், பருமனில்லாததும், குறுமையில்லாததும், நெடுமையில்லாததும், பிறப்பில்லாததும், குறைவு நிறைவில்லாததும்,உருவம் குணம் வர்ணமென்பவை யில்லாததுமாமோ, அது பிரஹ்மமென்று நிச்சயஞ்செய்யவேண்டும். (௬0)

यद्भासा भास्यतेऽर्कादि भास्यैर्यत्तु न भास्यते ।
येन सर्वमिदं भाति तद्ब्रह्मेत्यवधारयेत् ॥ ६१ ॥

(அ-கை.) மறுபடியும் அந்தப் பிரஹ்மஞானத்தின் பொருட்டு மூன்று சுலோகங்களால் வேறு சேர்த்துக் கூறுகின்றார்:—

यद्भासा अर्कादि भास्यते यत् तु भास्यैः न भास्यते येन इदं सर्वं भाति तत् ब्रह्म इति अवधारयेत् ॥

(சு-ம்.) எதன் விளக்கத்தால் சூரியன்முதலியன விளக்கப்படுகின்றனவோ, எது விளக்கப்படும் சூரியன்முதலிய

---

* ௧௧. இவை விலக்குமுகத்தாற் பிரஹ்மத்தை யறிவிக்கும் நிஷேத்திய விசேஷணங்களாம். இவைகளும் பிறவும் பிரஹ்மத்தைச் சொல்லாமற் சொல்லுவதனை ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் ௬௨வது கலையிற் காண்க.

வற்ருல்*கூ௨. விளக்கப்படுகிறதில்லையோ, எதனுல் இவ்வெல்லாம் விளங்குகின்றனவோ அது பிரஹ்மமென்று நிச்சயஞ்செய்க. கூக

स्वयमंतर्बहिर्व्याप्य भासयत्याखिलं जगत् ।
ब्रह्म प्रकाशते वह्निप्रतप्तायसपिंडवत् ॥ ६२ ॥

(அ-கை.) பிரஹ்மம் எல்லாவற்றையும் விளக்கித் தானும் விளங்குமென்பதனைத் திருஷ்டாந்தத்தால் விளக்குகின்ருர் :—

वह्निप्रतप्तायसपिंडवत् ब्रह्म स्वयं अंतः बहिः व्याप्य अखिलं जगत् भासयति प्रकाशते ॥

(சு-ம்.) அக்கினியினுற் பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புத்துண்டினைப்போலப் பிரஹ்மமானது தானே உள்ளும் வெளியும் வியாபித்துச் சகல ஜகத்தையும் விளக்கித் தானும் விளங்குகின்றது. (கூ௨)

जगद्विलक्षणं ब्रह्म ब्रह्मणोन्यन्न विद्यते ।
ब्रह्मान्यद्भाति चेन्मिथ्या यथा मरुमरीचिका ॥ ६३ ॥

(அ-கை.) பிரஹ்மம் ஜகத்தை விளக்கிக்கொண்டு தானும் விளங்குகின்றதெனவே, அத்வைதத்திற்கு ஹாநிவருதலால் அந்தப் பிரஹ்மமே யாவும் அதற்கந்நியம் சிறிதுமில்லையென்று கூறுகின்ருர் :—

जगद्विलक्षणं ब्रह्म ब्रह्मणः अन्यत् न विद्यते ब्रह्मान्यत् भाति चेत् यथा मरुमरीचिका मिथ्या ॥

(சு-ம்.) ஜகத்திற்கு *கூ௩. விலக்ஷணமானது பிரஹ்மம். *கூ௪. பரமார்த்தமாகப் பிரஹ்மத்திற் கந்நியமாக எதுவுமில்லை.

---

*கூ௨. "न तत्र सूर्यो भाति । அங்கு சூரியன் பிரகாசிக்கிறதில்லை" என்பது சுருதி.

*கூ௩. விலக்ஷணம்—வேறு.

*கூ௪. பரமார்த்தம்—உண்மை.

யாதேனு மொன்று பிரஹ்மத்திற் கந்யமாகத் தோற்றுமாயின் அது கானற்சலம்போல் மித்தையாம். (சுங)

दृश्यते श्रूयते यद्यद्ब्रह्मणोऽन्यन्न तद्भवेत् ।
तत्त्वज्ञानाच्च तद्ब्रह्म सच्चिदानंदमद्वयम् ॥ ६४ ॥

(அ-கை.) பின்னும் அந்தப் பிரஹ்மத்தினையே தெளிவாய் நிரூபிக்கின்றார் :—

यत् यत् दृश्यते श्रूयते तत् ब्रह्मणः अन्यत् न तत्त्वज्ञानात् च तत् सच्चिदानंदं अद्वयं ब्रह्म ॥

(சு-ம்.) கண்களால் எதெது காணப்படுகின்றதோ, * கூடு. காதுகளால் எது எது கேட்கப்படுகின்றதோ, அது பிரஹ்மத்திற் கந்யமாகச் சிறிது மில்லை. தத்துவஞானத்தினாலும் அது (ஜகத்து) சச்சிதாநந்த அத்வயமாகிய பிரஹ்மமே. (சுச)

सर्वगं सच्चिदात्मानं ज्ञानचक्षुर्निरीक्षते ।
अज्ञानचक्षुर्नेक्षेत भास्वंतं भानुमंधवत् ॥ ६५ ॥

(அ-கை.) பிரஹ்மம் எல்லாவற்றிலு மிருப்பதா யிருக்க அது எல்லோராலும் ஏன் காணப்படவில்லையெனக் கூறுகின்றார் :—

सर्वगं सच्चिदात्मानं ज्ञानचक्षुः निरीक्षते अज्ञानचक्षुः भास्वंतं भानुं अंधवत् न ईक्षेत ॥

(சு-ம்.) எல்லாவற்றிலு மிருப்பதான சச்சிதாத்மாவை ஞானக்கண்ணுடையவன் பார்க்கின்றான். அஞ்ஞானக்கண்ணுடையவன் பிரகாசிக்கின்ற சூரியனைக் காணாததுபோல அதனைக் காணான்.

---

* கூடு. காதுகளால் எது எது கேட்கப்படுகின்றதோ என்னும் உபலக்ஷணத்தினால் மனதினால் எது எது ஸ்மரிக்கப்படுகின்றதோ என்பன முதலியனவும் அறியத்தக்கனவாம்.

(வி-ம்.) அதனதன் அதிஷ்டான தத்துவமாக எல்லாவற்றின்கண்ணு முள்ள சத்துசித்துவடிவ ஆத்மாவை வேதாந்தசிரவணத்தா லுண்டாகிய பிரஹ்மாபரோக்ஷஞானநேத்திரமுடையவன் சுவரூபமாகக் காண்கின்றான். அஞ்ஞானநேத்திரமு (தேகேந்திரியாத்மபுத்தியு) டையவன் ஆத்மாவை அது சகலவுபாதிகளின்றியதாயும் எல்லாவற்றினிருப்பதாயுமிருந்தும் எங்கும் பிரகாசிக்கின்ற சூரியனைக் குருடன் காணமுடியாதது போலக் காணமாட்டான் என்பது பொருள். அதில் "न चक्षुषा गृह्यते नापि वाचा கண்ணினால் கிரகிக்கப்படுகிறதில்லை வாக்கினாலும் கிரகிக்கப்படுகிறதில்லை" என்னும் சுருதி பிரமாணமாம்.

இஃது அபிப்பிராயமாம்:—ஆத்மா ஞானவடிவத்தன்மையால் அதிருசியமா யிருத்தலின் சக்ஷுராமுதலிய இந்திரியங்களால் கிரகிக்கப்படுகிறதில்லை; அதுபோலவே தபசினாலாவது கர்மத்தினாலாவது அடையப்படுகிறதில்லை; கர்மத்தாற் சாதிக்கப்படுவது அநித்தமாகலின். ஆதலால் ஞானப்பிரசாதத்தால் ஞானக்கண்ணால் சுத்தாந்தக்கரணமுள்ள அவித்தை நீங்கியவன் எப்போதும் எங்கும் பிரஹ்மமே காண்கின்றான். இதனால் எங்கும் மற்றவர்களால் காணமுடியா தென்பது பொருள்.

श्रवणादिभिरुद्दीप्तो ज्ञानाग्निपरितापितः ।
जीवः सर्वमलान्मुक्तः स्वर्णवद्द्योतते स्वयम् ॥ ६६ ॥

(அ-கை.) * கூகூ. முன் வந்த ஞானம் திடமாதற்பொருட்டுப் பின்னும் சிரவணாதிகள் செய்யத்தக்கனவேயா மென்று கூறுகின்றார்:—

श्रवणादिभिः उद्दीप्तः ज्ञानाग्निपरितापितः जीवः सर्वमलात् मुक्तः स्वर्णवत् स्वयं द्योतते ॥

---

* கூகூ. முன்சொன்ன கிரமத்தால் அநுபவத்தை யடைந்து அதன் அப்பியாசமில்லாதவனுக்கு முந்திய வாசனையின் வசத்தால் சிறிது அஞ்ஞானம் சம்பவிக்கும். அதனால் அவ்வநுபவத்திற்குத் தடை வரும். அப்போது திடமாகாமையின், அஃதாகுதற்கு என்பது கருத்து.

(சு-ம்.) சிரவணமுதலியவற்றால் மூட்டப்பட்ட ஞானக்கினியினால் தபிக்கப்பட்ட ஜீவன் சர்வமலங்களினின்றும் முக்தனாய்ச் சுவர்ணம்போல் சுயமே பிரகாசிக்கின்றான்.

(வி-ம்.) இப்பிரகரணத்திற் கூறப்பட்ட சிரவணமுதலியவற்றால் மூட்டப்பட்ட ஞானமாகிய அக்கினியினால் தகிக்கப்பட்ட ஜீவன் சர்வ மலங்களினின்றும் விடுபட்டவனாய்த் தான் சுவர்ணம்போல் அகண்டசச்சிதாநந்தவடிவமாய்ப் பிரகாசிக்கின்றான். புடம்போட்ட பொன் உபாதியினாலாகிய மாற்றுக்குறைவுமுதலிய களங்கமொழிந்து தானே செவ்வையாய்ப் பிரகாசிக்கிறதுபோல் ஆத்மாவும் களங்கமற்றுத் தானாகவே பிரகாசிக்கின்றா னென்பது பொருள். (சுசு)

हृदाकाशोदितो ह्यात्मा बोधभानुस्तमोपहृत् ।
सर्वव्यापी सर्वधारी भाति सर्वं प्रकाशते ॥ ६७ ॥

(அ-கை.) இவ்வாத்மாவே அஞ்ஞானவிருளைக் கெடுத்து எல்லாவற்றையும் விளக்குகின்ற தன்மையினைக் கூறுகின்றார் :—

हृदाकाशोदितः हि आत्मा बोधभानुः तमोपहृत् सर्वव्यापी सर्वधारी भाति सर्वं प्रकाशते ॥

(சு-ம்.) (அகண்டாகாரவிருத்தியாகிய) இருதயாகாசத்திலுதித்த ஆத்மாவாகிய ஞானசூரியன் தன்னை யாசிரயித்திருந்த அஞ்ஞானமாகிய இருளைக் கெடுத்துச் சர்வவியாபியாயும் சகலத்தையும் தரித்ததாயும் விளங்குகின்றது. எல்லாவற்றையும் பிரகாசிக்கின்றது. (சுஎ)

दिग्देशकालाद्यनपेक्ष्य सर्वगं शीतादिहृन्नित्यसुखं निरंजनम् ।
यः स्वात्मतीर्थं भजते विनिष्क्रियः स सर्ववित्सर्वगतोऽमृतो भवेत् ॥

(அ-கை.) அபரோக்ஷஞானத்திற்குப் பிரதிபந்தமாயுள்ள பாபத்தை நீக்குதற்பொருட்டுப் பிரயாகையாதி தீர்த்தயாத்திரைகள் செய்யவேண்டாவோ வென்னு மாசங்கை நிகழ, ஆத்மதீர்த்

தத்தில் ஸ்நாநஞ்செய்தவனுக்குப் பாபம் பற்ருமையின் செய்ய வேண்டிய தொன்று மில்லை யென்று கூறுகின்ருர்:—

दिग्देशकालादि अनपेक्ष्य सर्वगं शीतादिहृत् नित्यसुखं निरंजनं स्वात्मा-तीर्थं यः विनिष्क्रियः भजते सः सर्ववित् सर्वगतः अमृतः भवेत् ॥

(சு-ம்) * கூஎ. திக்கு, தேசம், காலமுதலியவற்றின் அபேக்ஷையில்லாது எல்லாவற்றின்கண் ணுள்ளதும் குளிர்முதலியவற்றைக்கெடுப்பதும், நித்தியசுகமும், நிரஞ்சனமுமாகிய சுவாத்ம தீர்த்தத்தினை எந்த நிஷ்கிரியன் (பரமஹம்ஸன்) பஜிக்கின்ருனே அவன் சர்வஞ்ஞனுய்ச் சர்வவியாபியாய் அமுதனுகிருன். (கூஅ)

## ஆத்மபோதம்

## முடிந்தது.



* கூஎ. திக்கு கிழக்குமுதலியன. தேசம் காசிமுதலிய புண்ணிய க்ஷேத்திரங்கள். காலம் கிரகணம் அர்த்தோதயம் மஹோதயமுதலிய புண்ணியகாலங்கள். மற்றத்தீர்த்தங்களுக்கு முற்கூறிய திக்குமுதலியவற்றின் அபேக்ஷை யுண்டு. அன்றியும் அவை பரிச்சின்னமும், குளிர்முதலிய வருத்தத்தைத் தருவனவும், அநித்தியமும், துக்கமும், ஜனனமுதலியவற்றைத் தருமஞ்சனமுடையனவு மாதலோடு சுவர்க்காதிகளும் சித்தசுத்தியு மாகிய அற்பபயனைத் தருவனவாம். தனது ஆத்மதீர்த்தமோவெனின், முற்கூறிய தோஷங்க ளெவையு மின்றிப் பரமபுருஷார்த்தத்தைத் தருவதாம். ஆதலால் இவ்வாத்மதீர்த்தமாகும் பரமபுருஷனைத் தரிசிப்பவனுக்கே சகலபாபங்களும் நீங்குமெனின் அப்பாபங்களாகிய பிரதிபந்தங்க ளவனை எவ்வாறு அணுகும்? அணுகா வாகலின் அமுதனுகின்ரு னென்ருர்.

உ

ஓம் ஸ்ரீ கணேசாய நம:

# ஸ்ரீ தத்துவபோதம்.

மங்கலம்.

वासुदेवेन्द्रयोगीन्द्रं नत्वा ज्ञानप्रदं गुरुम् ।
मुमुक्षूणां हितार्थाय तत्त्वबोधोऽभिधीयते ॥ १ ॥

எங்குமாய் நின்றி லங்கு மிணையிலா வீசன் றானுஞ்
சங்கர பகவற் பாதந் தனிப்பெயர் பூண்டு வந்து
நங்குறை தீரு மாறு நவின்றனன் பாடி யாதி
யிங்கவன் றன்னை யேத்தி யியற்றுவன் றத்வ போதம்.

நூல்.

साधनचतुष्टयसंपन्नाऽधिकारिणां मोक्षसाधनभूतं तत्त्वविवेकप्रकारं वक्ष्यामः ॥

சாதனசதுட்டயசம்பன்னர்களாகிய அதிகாரிகளுக்கு மோக்ஷசாதனமாகிய தத்துவவிவேகப்பிரகாரத்தைச் சொல்லுவாம்:—

साधनचतुष्टयं किम् ॥

வினா:—சாதனசதுட்டய மென்பது யாது?

नित्यानित्यवस्तुविवेकः ॥ १ ॥ इहामुत्रार्थफलभोगविरागः ॥ २ ॥ शमादिषट्संपत्तिः ॥ ३ ॥ मुमुक्षुत्वं चेति ॥ ४ ॥

விடை:— ௧. நித்தியாநித்தியவஸ்துவிவேகம் (நித்திய அநித்தியப்பொருள்களைப் பகுத்தறிதல்), ௨. இகாமுத்திரார்த்தபலபோகவிராகம் (இம்மை மறுமைப் பயன்களாகிய போகங்களில் இராகமின்மை), ௩. சமாதிசட்சம்பத்தி (சமமுதலிய

ஆறனடைவு), ச. முமுக்ஷுத்துவம் (மோக்ஷத்தை விரும்புதல்) என்பனவாம்.

नित्यानित्यवस्तुविवेकः कः ॥

வினா:—நித்தியாநித்தியவஸ்துவிவேக மென்பது யாது?

नित्यवस्त्वेकं ब्रह्म तद्व्यतिरिक्तं सर्वमनित्यं । अयमेव नित्यानित्यवस्तुविवेकः ॥

விடை:—க. ஒன்றாகிய பிரஹ்மம் நித்தியப்பொருள்; அதற்கு அந்நியமான (வேறான) யாவும் அநித்தியப்பொருளா மென்னும் இதுவே நித்தியாநித்தியவஸ்துவிவேகம்.

विरागः कः ॥

வினா:—விராக மென்பது யாது?

इहस्वर्गभोगेषु इच्छाराहित्यम् ॥

விடை:—உ. இகலோகபரலோகபோகங்களில் இச்சையில்லாமையாம்.

शमादिसाधनसंपत्तिः का ॥

வினா:—சமாதிசாதனசம்பத்தி யென்பது யாது?

शमो दम उपरमस्तितिक्षा श्रद्धा समाधानं चेति ॥

விடை:—ந. (க) சமம், (உ) தமம், (ந) உபரதி, (ச) திதிக்ஷை, (ரு) சிரத்தை, (சு) சமாதானம் என்பனவாம்.

शमः कः ॥

வினா:—சமம் என்பது யாது?

मनोनिग्रहः ॥

விடை:—(க) மனதை யடக்குதல்.

दमः कः ॥

வி௫:—தமம் என்பது யாது ?

चक्षुरादिबाह्येन्द्रियनिग्रहः ।

விடை:—(உ) கண்முதலிய புறவிந்திரியங்களை யடக்குதல்.

उपरमः कः ॥

வி௫:—உபரதி (உபரமம்) என்பது யாது ?

स्वधर्मानुष्ठानमेव ॥

விடை:—(ங) சுவதர்மாநுஷ்டானமே அதாவது பாகிய தர்மங்களினின்றும் நிவர்த்தியாதலே.

तितिक्षा का ॥

வி௫:—திதிக்ஷை யென்பது யாது ?

शीतोष्णसुखदुःखादिसहिष्णुत्वम् ॥

விடை:—(ச) சீதம் (குளிர்ச்சி), உஷ்ணம், சுகம், துக்கமுதலியவற்றைச் சகித்தல்.

श्रद्धा कीदृशी ॥

வி௫:—சிரத்தை யென்பது யாது?

गुरुवेदांतवाक्यादिषु विश्वासः श्रद्धा ॥

விடை :—(ரு) குருவாக்கியம் வேதாந்தவாக்கியமுதலியவற்றில் உண்டாகும் விசுவாசம் சிரத்தை.

समाधानं किम् ॥

வி௫:—சமாதான மென்பது யாது ?

चित्तैकाग्रता ॥

விடை:—(கூ) சித்த ஏகாக்கிரத்தன்மை (மனவொருமை).

मुमुक्षुत्वं किम् ॥

வினா:—முமுக்ஷுத்துவம் என்பது யாது?

मोक्षो मे भूयादितीच्छा ॥

விடை:—ச. மோக்ஷம் எனக்கு உண்டாகவேண்டு மென்னும் இச்சை.

एतत्साधनचतुष्टयं । ततस्तत्त्वविवेकस्याधिकारिणो भवंति ॥

இது சாதனசதுட்டயம். இதனையுடையவர் தத்துவவிவேகத்திற்கு அதிகாரிகளாகின்றனர்.

तत्त्वविवेकः कः ॥

வினா:—தத்துவவிவேக மென்பது யாது?

आत्मा सत्यस्तदन्यत् सर्वं मिथ्येति ॥

விடை:—ஆத்மா சத்தியம், அதற்கன்னியமான யாவும் மித்தை யென்னும் நிச்சயம்.

आत्मा कः ॥

வினா.—ஆத்மா வென்பது யாது?

स्थूलसूक्ष्मकारणशरीराद्व्यतिरिक्तः पंचकोशातीतः सन् अवस्थात्रय-साक्षि सच्चिदानंदस्वरूपः सन् यस्तिष्ठति स आत्मा ॥

விடை:—ஸ்தூல சூக்ஷ்ம காரணசரீரங்களுக்கு வேறாய், பஞ்சகோசங்களுக்கு அப்பாற்பட்டதாய், மூன்றவஸ்தைகளுக்கும் சாட்சியாய், சச்சிதாநந்தசொரூபமாய் இருப்பதெதுவோ அஃது ஆத்மாவாம்.

स्थूलशरीरं किम् ॥

வினா:—ஸ்தூலசரீர மென்பது யாது ?

पंचीकृतपंचमहाभूतैः कृतं सत्कर्मजन्यं सुखदुःखादिभोगायतनं शरीरं जायते अस्ति वर्धते विपरिणमते अपक्षीयते विनश्यतीति षड्विकार-मेदतत्स्थूलशरीरम् ॥

விடை:—க. பஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களாலாக்கப்பட்டதும், கருமத்தாற்றோன்றியதும், சுகதுக்காதி போகத்திற் கிடனயதுமாய்ப் பிறக்கின்றது, இருக்கின்றது, வளர்கின்றது, திரிகின்றது, குறைகின்றது, கெடுகின்றது என்னும் ஆறு விகாரங்களையுமுடைய இச்சரீரம் ஸ்தூலசரீரமாம்.

सूक्ष्मशरीरं किम् ॥

வினா:—சூக்ஷ்மசரீர மென்பது யாது ?

अपंचीकृतपंचमहाभूतैः कृतं सत्कर्मजन्यं सुखदुःखादिभोगसाधनं पंच ज्ञानेन्द्रियाणि पंच कर्मेन्द्रियाणि पंच प्राणादयः मनश्चैकं बुद्धिश्चैका एवं सप्तदशकलाभिः सह यत्तिष्ठति तत्सूक्ष्मशरीरम् ॥

விடை:—உ. அபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களாலாகியதும், கருமத்தாற்றோன்றியதும், சுகதுக்காதி போகத்திற்குச் சாதனமாகியதுமாய், ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, பிராணாதி ஐந்து, மனம் ஒன்று, புத்தி ஒன்று ஆகிய இப்பதினேழு கலைகளோடு கூடியிருப்ப தெதுவோ, அது சூக்ஷ்மசரீரமாம்.

வினா:—ஞானேந்திரியங்க ளெவை ?

श्रोत्रं त्वक् चक्षुः रसना घ्राणं इति पंच ज्ञानेन्द्रियाणि ।

விடை:—சுரோத்திரம் (காது), துவக்கு (தோல்), சக்ஷு (கண்), * இரசனை (நா), கிராணம் (மூக்கு) என்னு மைந்தும் ஞானேந்திரியங்கள்.

வினு:—ஞானேந்திரியங்களின் அதிதேவதைகள் எவை?

श्रोत्रस्य दिग्देवता । त्वचो वायुः । चक्षुषः सूर्यः । रसनाया वरुणः । घ्राणस्य अश्विनौ इति ज्ञानेन्द्रियदेवताः ॥

விடை:—சுரோத்திரத்திற்குத் திக்கும், துவக்கிற்கு வாயுவும், சக்ஷுவிற்குச் சூரியனும், இரசனைக்கு வருணனும், கிராணத்திற்கு அசுவனிகுமாரரிருவரும் தேவதைகளாம்.

வினு:—ஞானேந்திரியங்களின் விஷயங்கள் எவை?

श्रोत्रस्य विषयः शब्दग्रहणम् ॥

त्वचो विषयः स्पर्शग्रहणम् ॥

चक्षुषो विषयः रूपग्रहणम् ॥

रसनाया विषयः रसग्रहणम् ॥

घ्राणस्य विषयो गंधग्रहणम् इति ॥

விடை,—சுரோத்திரத்திற்கு விஷயம் சத்தத்தைக் கவர்தல். துவக்கிற்கு விஷயம் பரிசத்தைக் கவர்தல். சக்ஷுவிற்கு விஷயம் உருவத்தைக்கவர்தல். இரசனைக்கு விஷயம் இரசத்தைக் கவர்தல். கிராணத்திற்கு விஷயம் கந்தத்தைக் கவர்தல் என்க.

வினு:—கன்மேந்திரியங்கள் எவை?

वाक्पाणिपादपायूपस्थानीति पंचकर्मेंद्रियाणि ॥

விடை:—வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்னுமைந்தும் கன்மேந்திரியங்களாம்.

வினு:—கன்மேந்திரியங்களின் அதிதேவதைகள் எவை?

वाचो देवता वन्हिः । हस्तयोरिंद्रः । पादयोर्विष्णुः । पायोर्मृत्युः ॥
उपस्थस्य प्रजापतिः इति कर्मेन्द्रियदेवताः ॥

---

* இதனையே சிங்குவை யென்றும் கூறுவர்.

விடை :—வாக்கிற்கு அக்கினியும், பாணி(கைகளு)க்கு இந்திரனும், பாதங்களுக்கு விஷ்ணுவும், பாயுவி(குதத்தி)ற்கு இயமனும், உபஸ்தத்திற்குப் பிரஜாபதியு(பிரஹ்மனு)ம் தேவதைகளாம்.

வினு :—கன்மேந்திரியங்களின் விஷயங்கள் எவை ?

वाचो विषयः भाषणम् । पाण्योर्विषयः वस्तुग्रहणम् । पादयोर्विषयः गमनम् । पायोर्विषयः मलत्यागः । उपस्थस्य विषयः आनंद इति ॥

விடை —வாக்கிற்கு வசனமும், பாணிக்குப் பண்டங்களை யேற்றலும், பாதத்திற்கு நடத்தலும், பாயுவிற்கு மலநீக்கமும், உபஸ்தத்திற்கு ஆநந்தமும் விஷயங்களாம்.

कारणशरीरं किम् ॥

வினு .—காரணசரீர மென்பது யாது ?

अनिर्वाच्यानाद्यविद्यारूपं शरीरद्वयस्य कारणमात्रं सत् स्वस्वरूपाज्ञानं निर्विकल्पकरूपं यदस्ति तत्कारणशरीरम् ॥

விடை :—ந. * அநிர்வாச்யமாய், † அநாதியாய், அவித்யா வடிவமாய்ச் சரீரமிரண்டற்கும் காரணமாத்திரமாயிருக்கும் **சுவ சொரூபாஞ்ஞானமாகிய நிருவிகற்பவடிவம் எதுவோ, அது காரணசரீரமாம்.

---

* மெய்யென்றும் பொய்யென்றும் சொல்லத்தகாதது எதுவோ அது அநிர்வாச்சியமாம். மாயையைப் பொய்யென்போமாயின் பிரபஞ்சோற்பத்தி கூடாது ; மாயையோ பிரபஞ்சத்தை உண்டுபண்ணுகின்றது ; சத்திய மென்போமாயின் ஞானத்தாற் கெடுகின்றது ; ஆகலின் மாயை அநிர்வாச்சியமாம். அங்ஙனமே பழுதையிற்றோன்றிய பாம்பு பொய் யென்போமாயின் உண்டாகின்ற அச்சம், நடுக்கமுதலியன உண்டாகலாகா. சத்திய மெனின் விசாரத்தாற் கெடுகின்றது. ஆதலாற் பழுதையிற் பாம்பு அநிர்வாச்சியமாம். அநிர்வாச்சியம் இஃது இன்னதென் றுறுதியாய்ச் சொல்லத்தகாதது. அநிர்வசநீயம் என்பதும் அதுவே.

† உற்பத்தி யில்லாததாய்.

** தன்வடிவத்தை அறியாமையாகிய.

अवस्थात्रयं किम् ॥

வி :—மூன்றவஸ்தைகள் எவை ?

जाग्रत्स्वप्नसुषुप्त्यवस्थाः ॥

விடை :—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி யென்பவை மூன்றவஸ்தைகளாம்.

जाग्रदवस्था का ॥

வி :—சாக்கிராவஸ்தை யென்பது யாது ?

श्रोत्रादिज्ञानेंद्रियैः शब्दादिविषयैश्च ज्ञायते इति यत् सा जाग्रदवस्था ॥

விடை :—சுரோத்திரமுதலிய ஞானேந்திரியங்களால் சப்த முதலிய விஷயங்களா லறியப்படுகின்றது என்பது எதுவோ, அது சாக்கிராவஸ்தையாம். (அவஸ்தை-காலம்-சமயம்.)

வி :—இவ்வவஸ்தையின் அபிமானியின் பெயர் யாது ?

स्थूलशरीराभिमानी आत्मा विश्व इत्युच्यते ॥

விடை :— இவ்வவஸ்தையின் தூலசரீராபிமானியாகிய ஆத்மா விசுவன் என்று சொல்லப்படுகின்றான்.

स्वप्नावस्था केति चेत् ॥

வி :—சொப்பனவஸ்தை யென்பது யாது எனின்?

जाग्रदवस्थायां यत् दृष्टं यच्छ्रुतं तज्जनितवासनया निद्रासमये यः प्रपंचः प्रतीयते सा स्वप्नावस्था ॥

விடை :—சாக்கிராவஸ்தையில் பார்க்கப்பட்டவைகளாலும், கேட்கப்பட்டவைகளாலும் உண்டாகிய வாசனையால் நித்திரைக் காலத்தில் எதில் பிரபஞ்சம் தோற்றுகின்றதோ, அது சொப்பனவஸ்தையாம்.

வினு:—இவ்வவஸ்தையின் அபிமானி யாவன்?

सूक्ष्मशरीराभिमानी आत्मा तैजस इत्युच्यते ॥

விடை:—இவ்வவஸ்தையின் சூக்ஷ்மசரீராபிமானியாகிய ஆத்மா தைஜஸன் என்று சொல்லப்படுகின்றான்.

अतः सुषुप्त्यवस्था का ॥

வினு:—சுழுத்தியவஸ்தை யென்பது யாது?

अहं किमपि न जानामि सुखेन मया निद्रानुभूयत इति सुषुप्त्यवस्था ॥

விடை:—யான் ஒன்று மறியேன், நித்திரை யென்னாற் சுகமா யநுபவிக்கப்பட்டது என்னும் நினைவிற்கு ஏதுவாய அநுபவகாலம் சுழுத்தியவஸ்தையாம்.

வினு:—இவ்வவஸ்தையின் அபிமானி யாவன்?

कारणशरीराभिमानी आत्मा प्राज्ञ इत्युच्यते ॥

விடை:— இவ்வவஸ்தையின் காரணசரீராபிமானியாகிய ஆத்மா பிராஞ்ஞன் என்று சொல்லப்படுகின்றான்.

पंच कोशाः के ॥

வினு:—பஞ்சகோசங்கள் எவை?

अन्नमयः प्राणमयः मनोमयः विज्ञानमयः आनंदमयश्चेति ॥

விடை:—அந்நமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆநந்தமயம் என்பனவாம்.

अन्नमयः कः ॥

வினு:—அந்நமயகோசம் என்பது யாது?

अन्नरसेनैव भूत्वा अन्नरसेनैव वृद्धिं प्राप्य अन्नरूपपृथिव्यां यद्विलीयते तदन्नमयः कोशः । स्थूलशरीरम् ॥

விடை :—அந்நரசத்தினுலே யுண்டாய், அந்நரசத்தினுலே விருத்தி யடைந்து, அந்நரூபப்பிருதிவியில் எது ஒடுங்குகின்றதோ, அஃது அந்நமயகோசமாம். அதுவே ஸ்தூலசரீரமாம்.

प्राणमयः कः ॥

வினு :—பிராணமயகோசம் என்பது யாது?

प्राणादिपंचवायवः वागादींद्रियपंचकं प्राणमयः ॥

விடை :—* பிராணுதியைந்து வாயுக்களும் வாக்காதிஐந்து கன்மேந்திரியங்களும் பிராணமயகோசமாம்.

मनोमयः कोशः कः ॥

வினு :—மனேமயகோசம் என்பது யாது?

मनश्च ज्ञानेंद्रियपंचकं मिलित्वा भवति स मनोमयः कोशः ॥

விடை :—மனதும், ஞானேந்திரிய மைந்தும் சேர்ந்து ஆவது எதுவோ, அது மனேமயகோசமாம்.

विज्ञानमयः कः ॥

வினு :—விஞ்ஞானமயகோசம் என்பது யாது?

बुद्धिर्ज्ञानेन्द्रियपंचकं मिलित्वा यो भवति विज्ञानमयः कोशः ॥

விடை :—புத்தியும் ஞானேந்திரிய மைந்துஞ் சேர்ந்து ஆவது எதுவோ, அது விஞ்ஞானமயகோசமாம்.

---

* பிராணுதி யைந்து வாயுக்களாவன:—பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்பன. அவற்றுள், பிராணன் இதயத்திலிருந்து உசுவாசநிசுவாசங்களைச் செய்யும். அபானன் குதத்திலிருந்துகொண்டு மலசலங்களை வெளிப்படுத்தும். சமானன் உந்தியிலிருந்துகொண்டு உண்ட அந்நரசங்களை நாடியின் வழியாய்ச் சரீரமுழுவதும் செலுத்தும். உதானன் உண்பனவும் பருகுவனவு மாகிய அந்நரசங்களைப் பிரிக்கும். வியானன் உடல் முழுவதினு மிருந்து உடலின் மூட்டுகளைத் திருப்பும்.

आनंदमयः कः ।

வின:—ஆநந்தமயகோசம் என்பது யாது?

एवमेव कारणशरीरभूताविद्यास्थमलिनसत्त्वं प्रियादिवृत्तिसहितं सत् आनंदमयः कोशः ।

விடை:—இப்படியே காரணசரீரவடிவினதாகிய அவித்தையின் கணுள்ள *மலினசத்துவமானது † பிரியாதி விருத்திகளோடு கூடியதாய் ஆநந்தமயகோசமாம்.

एतत्कोशपंचकं । मदीयं शरीरं मदीयाः प्राणाः मदीयं मनश्च मदीया बुद्धिर्मदीयं ज्ञानमिति स्वेनैव ज्ञायते । तद्यथा मदीयत्वेन ज्ञातं कटककुंडलगृहादिकं स्वस्माद्भिन्नं तथा पंचकोशादिकं मदीयत्वेन ज्ञात आत्मा न भवति ॥

இப்பஞ்சகோசங்கள் என்சரீரம், என்பிராணன், என் மனம், என்புத்தி, என்ஞானம் என்று தன்னுலேயே உணரப்படுகின்றன. எப்படி எனதென்னுந் தன்மையால் அறியப்பட்ட கடகம் (காப்பு), குண்டலம் (கடுக்கன்), வீடுமுதலியன அறிகிறவனுகிய தன்னினும் வேறுகின்றனவோ, அதுபோலப் பஞ்சகோசமுதலியனவும் எனதென்னுந்தன்மையால் அறியப்படுகின்றன வாதலால் ஆத்மா வாகா.

आत्मा तर्हि कः ॥

வின:—அப்படியானல் ஆத்மாவின் சொரூபம் யாது?

---

* இரஜோதமோகுணங்களால் அமிழ்த்தப்பட்ட சத்துவகுணம் மலினசத்துவகுணமாம்.

† பிரியாதிவிருத்திகளாவன:—விரும்பிய பொருளைக் கண்டகாலத்துண்டாகும் சுகவிருத்தி பிரியவிருத்தி; விரும்பியபொருள் கிடைத்த காலத்துண்டாகும் சுகவிருத்தி மோதவிருத்தி; விரும்பியபொருளைப் போகிக்குங் காலத்துண்டாகும் சுகவிருத்தி பிரமோதவிருத்தி.

सच्चिदानंदस्वरूपः ॥

விடை :—சத்து, சித்து, ஆநந்தம் ஆத்மாவின்சொரூபமாம்.

सत्किं ॥

வினா :—சத் தென்பது யாது ?

कालत्रयेऽपि तिष्ठतीति सत् ॥

விடை :—மூன்று காலங்களினும் நிற்கின்றது என்பதனால் சத்தாம்.

चित्किं ॥

வினா :—சித் தென்பது யாது ?

ज्ञानस्वरूपः ॥

விடை :—ஞானசொரூபம்.

आनंदः कः ॥

வினா :—ஆநந்த மென்பது யாது ?

सुखस्वरूपः ॥

விடை —சுகசொரூபம்.

एवं सच्चिदानंदरूपं स्वात्मानं विजानीयात् ॥

இவ்வாறு சச்சிதாநந்த சொரூபமான ஆத்மாவை (தன்னை) அறியவேண்டும்.

अथ चतुर्विंशतितत्त्वोत्पत्तिप्रकारं वक्ष्यामः ॥

வினா :—இனி இருபத்துநான்கு தத்துவோற்பத்தியின் கிரமம் கூறுவாம் :—

ब्रह्माश्रया सत्त्वरजतमगुणात्मिका माया अस्ति । ततः आकाशः संभूतः । आकाशाद्वायुः वायोस्तेजः तेजस आपः अद्भ्यः पृथिवी ॥ एतेषां

पंचतत्त्वानां मध्ये आकाशस्य सात्विकांशात् श्रोत्रेंद्रियं संभूतं । वायोः सात्विकांशात् त्वगिंद्रियं संभूतं । अग्नेः सात्त्विकांशात् चक्षुरिंद्रियं संभूतं । जलस्य सात्त्विकांशात् रसनेंद्रियं संभूतं । पृथिव्याः सात्त्विकांशात् घ्राणेंद्रियं संभूतं । एतेषां पंचतत्त्वानां समष्टिसात्विकांशात् मनोबुद्ध्यहंकारचित्तांतःकरणानि संभूतानि । संकल्पविकल्पात्मकं मनः । निश्चयात्मिका बुद्धिः । अहंकर्त्ता अहंकारः । चिंतनकर्तृ चित्तं । मनसो देवता चंद्रमा । बुद्धेर्ब्रह्मा । अहंकारस्य रुद्रः । चित्तस्य वासुदेवः ॥

விடை :—பிரஹ்மத்தை ஆசிரயித்ததும், சத்துவரஜோ தமோகுணவடிவினதுமாகிய மாயை யுளது. அதனின்றும் ஆகாயமும், ஆகாயத்தினின்று வாயுவும், வாயுவினின்று தேயுவும், தேயுவினின்று அப்புவும், அப்புவினின்று பிருதிவியும் உண்டாயின. இவ்வைந்து தத்துவங்களுள் ஆகாயத்தின் சாத்துவிகாமிசத்தினின்று சுரோத்திரேந்திரிய முண்டாயிற்று. வாயுவின் சாத்துவிகாமிசத்தினின்று துவக்கிந்திரிய முண்டாயிற்று. அக்கினியின் சாத்துவிகாமிசத்தினின்று சக்ஷுரிந்திரிய முண்டாயிற்று. ஜலத்தின் சாத்துவிகாம்சத்தினின்று இரசனேயிந்திரிய முண்டாயிற்று. பிருதிவியின் சாத்துவிகாமிசத்தினின்று கிராணேந்திரிய முண்டாயிற்று. இவ்வைந்து தத்துவங்களின்*சமஷ்டி சாத்துவிகாமிசத்தினின்று மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அந்தக்கரணங்கள் உண்டாயின. சங்கற்பவிகற்பவடிவினது மனம்; நிச்சயவடிவினது புத்தி; யான் என்பதைச் செய்வது அகங்காரம்; சிந்தனையைச் செய்வது சித்தம். இவற்றுள் மனதிற்குச் சந்திரனும், புத்திக்குப் பிரஹ்மனும், அகங்காரத்திற்கு உருத்திரனும், சித்தத்திற்கு வாசுதேவனும் தேவதைகளாம்.

एतेषां पंचतत्त्वानां मध्ये आकाशस्य राजसांशात् वागिंद्रियं संभूतं। वायोः राजसांशात् पाणींद्रियं संभूतं । वह्नेः राजसांशात् पादेंद्रियं संभूतं ।

* சமஷ்டி = சேர்க்கை.

जलस्य राजसांशात् उपस्थेंद्रियं संभूतं । पृथिव्या राजसांशात् गुदेंद्रियं संभूतं। एतेषां समष्टिराजसांशात् पंचप्राणाः संभूताः। एतेषां पंचतत्त्वानां तामसांशात्। पंचीकृतपंचतत्त्वानि भवंति ॥

இவ்வைந்து தத்துவங்களுள் ஆகாயத்தின் இராசதாமிசத்தினின்று வாக்கிந்திரியமும், வாயுவின் இராசதாமிசத்தினின்று பாணீந்திரியமும், அக்கினியின் இராசதாமிசத்தினின்று பாதேந்திரியமும், ஜலத்தின் இராசதாமிசத்தினின்று உபஸ்தேந்திரியமும், பிருதிவியின் இராசதாமிசத்தினின்று குதேந்திரியமும் உண்டாயின. இவற்றின் சமஷ்டி இராசதாமிசத்தினின்று பஞ்சப்பிராண னுண்டாயின. இவ்வைந்து தத்துவங்களின் தாமதாமிசத்தினின்று பஞ்சீகிருதபஞ்சதத்துவங்கள் உண்டாகின்றன. இஃது இருபத்துநான்கு தத்துவோற்பத்திக்கிரமமாம்.

पंचीकरणं कथं इति चेत् ॥

வினு :—* பஞ்சீகரணம் எப்படியெனின் ?

एतेषां पंचमहाभूतानां तामसांशस्वरूपं एकं एकं भूतं द्विधा विभज्य एकं एकमर्धं पृथक् तूष्णीं व्यवस्थाप्य अपरं अपरं अर्धं चतुर्धा विभज्य स्वार्धमन्येषु अर्धेषु स्वभागचतुष्टयं संयोजनं कार्यं। तदा पंचीकरणम् भवति। एतेभ्यः पंचीकृतपंचमहाभूतेभ्यः स्थूलशरीरम् भवति। एवं पिंडब्रह्मांडयोरैक्यं संभूतम् ॥

விடை :—இப்பஞ்சமகாபூதங்களின் தாமசாம்ச சொரூபமாகிய ஒவ்வொரு பூதத்தையும் இவ்விரண்டாகப் பிரித்து, அவற்றின் ஒவ்வொரு பாதியை வேருகச் சும்மா விருத்தி, மற்ற ஒவ்வொரு பாதியையும் நந்நான்காகப் பிரித்து, தமது பாதிகளின் வேருகிய பாதிகளில் தம்பாகங்கள் நான்கையும் சேர்க்கவேண்டும். அப்பொழுது † பஞ்சீகரணம் ஆகின்றது. இப்பஞ்சீகிருதபஞ்ச

* பஞ்சீகரணம்—அவ்வைந்தாக்கல்.

† இப்பஞ்சீகரணத்தை ஸ்ரீவிசாரசந்திரோதயம் என்னும் நூலில் விரிவாய்க் காணலாம்.

மகாபூதங்களினின்றும் ஸ்தூலசரீரம் உண்டாகின்றது. இவ்வாற்றாற் பிண்டப்பிரஹ்மாண்டங்களுக்கு ஐக்கிய முண்டாயிற்று.

வினா:—ஜீவ னென்பது யாது? ஈசுவரன் யாவன்?

स्थूलशरीराभिमानी जीवनामकं ब्रह्मप्रतिबिंबं भवति। स एव जीवः प्रकृत्या स्वस्मात् ईश्वरं भिन्नत्वेन जानाति। अविद्योपाधिः सन् आत्मा जीव इत्युच्यते। मायोपाधिः सन् ईश्वर इत्युच्यते एवं उपाधिभेदाज्जीवेश्वरभेदादृष्टिर्यावत्पर्यंतं तिष्ठति तावत्पर्यंतं जन्ममरणादिरूपसंसारो न निवर्त्तते तस्मत्कारणान्न जीवेश्वरयोर्भेदबुद्धिः स्वीकार्या॥

விடை:—ஸ்தூலசரீராபிமானியாய் ஜீவ னென்னும் பெயருடையதாய்ப் பிரஹ்மத்தின் பிரதிபிம்ப முண்டாகின்றது. அச்சீவனே பிரகிருதியினால் ஈசுவரனைத் தன்னின் வேறாக அறிகின்றது. அவித்தையாகிய உபாதியுடையதாய் ஆத்மா ஜீவனெனப்படுகின்றது; மாயோபாதி யுடையதாய் ஈசுவரன் எனப்படுகின்றது. இவ்வாறு உபாதிபேதத்தால் ஜீவேசுவரபேததிருஷ்டி எதுவரையிலு மிருக்கின்றதோ, அதுவரையிலும் ஜனனமரண முதலிய வடிவினதாகிய சம்சாரம் நீங்குகிறதில்லை. அக்காரணத்தால் ஜீவேசுவரர்களின் பேதபுத்தி (ஜீவன் வேறு ஈசுவரன் வேறு என்னும் ஞானம்) அங்கிகரிக்கத்தக்க தன்று.

ननु साहंकारस्य किंचिज्ज्ञस्य जीवस्य निरहंकारस्य सर्वज्ञस्येश्वरस्य तत्त्वमसीति महावाक्यात् कथमभेदबुद्धिः स्यादुभयोः विरुद्धधर्माक्रांतत्वात् इति चेत्॥

வினா:—அப்படியானால் அகங்காரத்தோடு கூடிய கிஞ்சிஞ்ஞனாகிய ஜீவனுக்கும், அகங்காரமில்லாதவனும் சருவஞ்ஞனுமாகிய ஈசுவரனுக்கும், இருவரிடத்தும் விரோததருமம் காணப்படுதலால் தத்துவமஸி யென்னும் மகாவாக்கியத்தால் எப்படி அபேதஞானம் உண்டாகும் எனின்?

न स्थूलसूक्ष्मशरीराभिमानी त्वंपदवाच्यार्थं उपाधिविनिर्मुक्तं समाधिदशासंपन्नं शुद्धं चैतन्यं त्वंपदलक्ष्यार्थः॥

விடை:—அப்படி அன்று; ஸ்தூலசூக்ஷ்மசரீராபிமானி துவம்பதவாச்சியார்த்தம்; உபாதியினின்று விடுபட்டதும் சமாதிதசையடைந்ததுமாகிய சுத்தசைதன்யம் துவம்பதலக்ஷியார்த்தம்.

एवं सर्वज्ञत्वादिविशिष्ट ईश्वरः तत्पदवाच्यार्थः ॥ उपाधिशून्यं शुद्धचैतन्यं तत्पदलक्ष्यार्थः ॥ एवं च जीवेश्वरयोः चैतन्यरूपेणाभेदे बाधकाभावः ॥

இப்படியே சருவஞ்ஞத்துவமுதலியவற்ேறாடுகூடிய ஈசுவரன் தத்பதவாச்சியார்த்தமும், உபாதியின்றிய சுத்தசைதன்னியம் தத்பதலக்ஷியார்த்தமுமாம். ஆகவே ஜீவேசுவரர்களுக்குச் சைதன்னியவடிவமாக அபேதம் கூறுதலில் பாதகமின்று.

एवं च वेदांतवाक्यैः सद्गुरूपदेशेन च सर्वेष्वपि भूतेषु येषां ब्रह्मबुद्धिरुत्पन्ना ते जीवन्मुक्ता इत्यर्थः ॥

இவ்விதத்தால் வேதாந்தவாக்கியங்களாலும் சற்குரு உபதேசத்தாலும் எல்லாப்பூதங்களிடத்தும் எவர்களுக்குப் பிரஹ்மபுத்தி (சுத்த சச்சிதாநந்தப்பிரஹ்மம் நான் என்னும் நிச்சயம் உண்டாகின்றதோ,) அவர்களே ஜீவன்முக்தர்கள் எனப் பொருளாகின்றது.

ननु जीवन्मुक्तः कः ?

வினு:—அப்படியானல் ஜீவன்முக்தன் யாவன் ?

यथा देहोऽहं पुरुषोहं ब्राह्मणोऽहं शूद्रोऽहमस्मीति दृढनिश्चयस्तथा नाहं ब्राह्मणः न शूद्रः पुरुषः किंतु असंगःसच्चिदानंदस्वरूपः प्रकाशरूपः सर्वांतर्यामी चिदाकाशरूपोऽस्मीति दृढनिश्चयरूपाऽपरोक्षज्ञानवान् जीवन्मुक्तः ब्रह्मैवाहमस्मत्यिपरोक्षज्ञानेन निखिलकर्मबंधनिर्मुक्तः स्यात् ॥

விடை:—தேகம் யான், புருஷன் யான்? பிராஹ்மணன் யான், சூத்திரன்யான் என்னும் திடநிச்சயத்தைப்போல, யான் பிராஹ்மணன் அல்லன், யான் சூத்திர னல்லன், யான் புருஷ னல்லன், யான் அசங்க சச்சிதானந்த சொப்பிரகாச சருவாந் தரியாமியாகிய சிதாகாசசொரூபன் என்னும் திடநிச்சயவடி வினதாகிய அபரோக்ஷஞான முடையவன் ஜீவன்முத்தன் எனப் படுவன். பிரஹ்மமே யானென்னும் அபரோக்ஷஞானத்தால் சகல கருமபந்தங்களினின்றும் விடுபட்டவனுகின்றுன்.

कर्माणि कतिविधानि संतीति चेत् ॥

வினு:—கருமங்கள் எத்தனை வகையாம் எனின்?

आगामिसंचितप्रारब्धभेदेन त्रिविधानि संति ॥

விடை:—ஆகாமி, சஞ்சிதம், பிராரப்தம் என்னும் பேதத் தால் மூவகையாம்.

आगामिकर्म किं ॥

வினு:—ஆகாமி என்பது யாது?

ज्ञानोत्पत्त्यनंतरं ज्ञानिदेहकृतं पुण्यपापरूपं कर्म यदस्ति तदागामीत्यभिधीयते ॥

விடை:—ஞானத்தின் உற்பத்திற்குப் பிறகு ஞானியின் வர்த்தமான தேகத்திற் செய்யப்படும் புண்ணியபாபமாகிய கரு மம் எதுவோ, அது * ஆகாமி எனப்படும்.

संचितं कर्म किम् ॥

வினு:—சஞ்சிதம் என்பது யாது?

अनंतकोटिजन्मानां बीजभूतं सत् यत्कर्मजातं तिष्ठति तत्संचितं ज्ञेयम् ॥

---

* ஆகாமி=வருவினை.

விடை :—அநந்தகோடி ஜன்மங்களுக்குக் காரணவடிவமாய் முன்னரே சம்பாதிக்கப்பட்டுள்ள கருமக்கூட்டம் எதுவோ, அது * சஞ்சிதம் என்று அறியத்தக்கது.

प्रारब्धकर्मकिमिति चेत् ॥

வினா :—பிராரப்தகருமம் யாது எனின் ?

इदं शरीरमुत्पाद्य इह लोके एवं सुखदुःखादिप्रदं यत्कर्म तत्प्रारब्धं ॥

விடை :—இச்சரீரத்தை யுண்டுபண்ணி இவ்வுலகத்தில் இவ்வாறு சுகதுக்காதிகளைத் தரும் கருமம் எதுவோ, அது † பிராரப்தமாம்.

வினா :—பிராரப்தகர்மம் எதனால் நசிக்கும் ?

भोगेन नष्टं भवति प्रारब्धकर्मणां भोगादेव क्षय इति ॥

விடை:—'பிராரப்தகருமங்கட்கு நாசம் போகத்தினாலேயே யுண்டாம்' என்பதனால் பிராரப்தகர்மம் போகத்தினால் நஷ்டமாம்.

வினா :—அப்படியானால் சஞ்சிதகருமம் எதனால் நசிக்கும் ?

संचितं कर्म ब्रह्मैवाहमिति निश्चयात्मकज्ञानेन नश्यति ॥

விடை :—சஞ்சிதகருமம் பிரஹ்மமே நான் என்னும் நிச்சயவடிவினதாகிய ஞானத்தாற் கெடும்.

வினா :—ஆகாமிகருமம் எதனாற் கெடும் ?

आगामि कर्मापि ज्ञानेन नश्यति । किंच आगामिकर्मणां नलिनीदलगतजलवत् ज्ञानिनां संबंधो नास्ति ॥

விடை :—ஆகாமிகருமமும் ஞானத்தாற் கெடும். தாமரையிலையிற் றண்ணீர்போல் ஆகாமிகருமத்திற்கும் ஞானிக்கும் சம்பந்த மில்லை.

---

* சேர்க்கப்பட்டுள்ள வினை.

† போகத்தைத் தர ஆரம்பிக்கப்பட்டுள்ள வினை.

வினு.—அப்படியானுல் அவர்களாற் செய்யப்படும் புண்ணியபாபங்களுக்குக் கதி யாது?

किंच ये ज्ञानिनं स्तुवंति भजंति अर्चयंति तान्प्रति ज्ञानिकृतं आगामि पुण्यं गच्छति । ये ज्ञानिनं निंदंति द्विषंति दुःखप्रदानं कुर्वंति तान्प्रति ज्ञानिकृतं सर्वं आगामिक्रियमाणं यदवाच्यं कर्म पापात्मकं तद्गच्छति ॥

விடை:—*ஞானியை எவர்கள் துதித்துப் பூசித்து அருச்சிக்கின்ருர்களோ, அவர்களை அவன் செய்த ஆகாமிபுண்ணியமும், ஞானியை எவர்கள் நிந்தித்துத் துவேஷித்துத் துக்கத்தைத் தருகின்ருர்களோ, அவர்களை ஞானி செய்த சகல ஆகாமிபாபமும் அடைகின்றன.

வினு:—இவ்வாறு ஆத்மாவை யறிதலாற் பய னென்னை?

तथा चात्मवित्संसारं तीर्त्वा ब्रह्मानंदं इहैव प्राप्नोति । तरति शोकमात्मविदिति श्रुतेः । तनुं त्यजतु वा काश्यां श्वपचस्य गृहेऽथवा । ज्ञानसंप्राप्तिसमये मुक्तोऽसौ विगताशयः इति स्मृतेश्च ॥

இவ்வாறு ஆத்மாவையுணர்ந்தவன் "ஆத்மஞானியானவன் சோகத்தைக் கடக்கின்ருன்" என்னுஞ் சுருதியினுலும், "காசியிலேனும் சண்டாளனுடைய வீட்டிலேனும் சரீரத்தை விடுக; பற்றெழிந்த இவன் ஞானங் கிடைத்தகாலத்தில் முக்தனுகின்ருன்" என்னும் ஸ்மிருதியினுலும் சம்சாரத்தைக் கடந்து பிரஹ்மாநந்தத்தை இகத்திலேயே யடைகின்ருன்.

॥ इति तत्त्वबोधप्रकरणं समाप्तम् ॥

ஸ்ரீ தத்துவபோதம்

முடிந்தது.



"* सुहृदः पुण्यकृत्यान् द्विषन्तः पापकृत्यान् गृह्णंति இதஞ்செய்வோர் அவனுடைய புண்ணியங்களையும் துவேஷிப்போர் பாபங்களையும் கொள்ளுகின்ருர்கள்" என்பது சுருதி.

கீதைக்கொத்து பு-௧. உத்தரகீதை (சம்ஸ்கிருதசுலோகமும் தமிழுரையும்) ... 0–4—0

கீதைக்கொத்து 2-ம் புத்தகம் ஸ்ரீ ராமகீதை (சம்ஸ்கிருதசுலோகமும் தமிழுரையும்) ... 0—3—0

சாந்தோக்கியத்துள்ள தத்துவமஸிமகாவாக்கிய உபதேசம் சுகரகஸ்யோபநிஷதத்துள்ள நான்குமகாவாக்கியார்த்தத்துடன் 2-ம் பதிப்பு ... 0—2—0

ஸ்ரீ விசாரசந்திரோதயம் 2-ம்பதிப்பு ஒவ்வொரு கலைப்பொருளடங்கிய சூத்திரங்களுடனும் அநேக சுருதிப்பிரமாணங்களுடனும் முன் பதிப்பினும் விசேஷமாக விருத்திசெய்யபபட்டது ... 1—4—0

திருக்குறள் மூலம் பரிமேலழகருரை, தெளிபொருள் விளக்கப் பதவுரை, குறிப்புரைகளுடன் ... 6–0—0

தர்க்கபரிபாஷை குறிப்புரையுடன் ... 1—0—0

சித்தாந்தபிந்து (வேதாந்தம்) ... 0-10—0

ரிபுகீதைத்திரட்டு (குறிப்புரையுடன்) ... 1—0—0

வேதாந்த பரிபாஷை (தமிழ்) ... 0-10—0

Rules for Daily life ... 0—8—0

மதுரைமான்மியம் இஃதோர் வசனநூல் பாண்டியர்களின் பெயர் காலம் முதலியனவுந் தெளிவாகக்காணலாம் ... 0—8—0



சங்கரகிரந்தாவலி]  [புத்தகம் ௩.

ஓம் தத்ஸத்ப்ரஹ்மணே நம:

# ॥ श्री पञ्चीकरणादि ॥



ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசார்ய

ஸ்ரீ சங்கரபகவத்பாதர் அவர்களால்

அருளிச்செய்யப்பட்ட

# ஸ்ரீ பஞ்சீகரண முதலியன

இவை

தஞ்சைமாநகரம்

வெ. சுப்புஸ்வாமிராஜு அவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு

தஞ்சை

ஸ்ரீ வித்தியா விநோதினி முத்திராசாலையிற்

பதிக்கப்பட்டன.



1914

விலை அணா **12**.

# முகவுரை.

ஸ்ரீ பரமகருணாநிதியான பரமேசுவரன்.

காமம் மோகமென்னும் திமிதிமிங்கலமும், தனலோப மென்னும் முதலைகளும், கோபமென்னும் வடவாநலமும், மூடத் தன்மை யென்னும் பாசிகளும், சஞ்சலமென்னும் அலைகளும், ஓரோர் காலத்துண்டாகும் அறிவென்னுங் குமிழிகளும், அஞ் ஞானமென்னுஞ் ஜலமுமுள்ளதான சம்சாரமென்னுங் கடலில் ஜீவர்களாகிய மீனங்கள் இயமனென்ற செம்படவன் வீசிய பாச மாகிற வலையிலகப்பட்டு மாய்வதோடு.

उद्घाटित नवद्वारे पञ्जरे विहगोऽनिलः ।
यत्तिष्ठति तदाश्चर्यं प्रयाणे विस्मयः कुतः ॥

திறந்துள்ள ஒன்பது வாயிலுடைய சரீரமான கூட்டில் பிராணவாயு வென்னும் பக்ஷி நிலைத்திருப்பதாச்சரியம் அது வெளிப்படுவதில் ஆச்சரியமேது என்ப துணராது.

येतन्मंदिरमुन्नतं विरचितं प्राकारएषस्त्वयं
बद्धोयत्र च राधिका प्रियतमो देवश्च संस्तापितः ।
उद्यानानि च कल्पितानि ललितान्यापूरिकोषोधनै
राक्रांताश्च महाजना ननुमया धन्यामदन्योऽस्तिकः ॥

இவ்வுயரமான மாளிகை என்னாற் கட்டப்பட்டது, இப்பிர காரம் யானே கட்டினேன், இதில் இராதாபிரியதமனான கிருஷ்ணதேவன் என்னால் ஸ்தாபிக்கப்பட்டுளன் இச்சோலைகளை யானுண்டாக்கினேன், என் பொக்கிஷத்திற் பெட்டி பெட்டி யாய் திரவியம் நிறைத்திருக்கின்றேன், இத்தனை பேர்கள் என்னு லாதரிக்கப்படுகிறார்கள். ஆகையால் என்னினும் மேம்பட்டவன் எவனிருக்கின்றான் என்று பிதற்றிக்கொண்டு.

स्तेय हिंसानृतं दंबः कामः क्रोधः स्मयो मदः ।
भेदो वैरमविश्वासः संस्पर्धा व्यसनानिच ॥

திருட்டு அஹிம்சை பொய் இடம்பம் காமம் குரோதம் களிப்பு மதம் வஞ்சகம் பகை விசுவாசமின்மை ஸம்ஸ்பர்தா; (ஆசை) ஆகிய இவை வியசனத்திற்கு காரணமென்பதோராது நாசமடைதலேயும்.

"பௌத்தர்கள் அதிக்கிரமித்துக் கருமங்களேது? உபாசனையேது? சன்னியாசமேது? வயிறு வளர்க்கப் பிராஹ்மணர்கள் ஏற்படுத்திக்கொண்டார்கள் என்பதோடு, வேதமாகிய தாயையும் நிந்திக்கிறார்கள். இதனல் வேதநெறி குறைந்து தேவாராதனையின்றி யாகங்களுமில்லா தொழிந்தன. என் செய்வோம்? பெருமானே" யென்று தேவர்கள் வேண்டுதலேயுங் கண்டு. கருமகாண்டத்தைத் தாபிக்கக் குமாரக்கடவுளேயும், உபாசன காண்டத்தைத் தாபிக்க சங்கருஷணரையும் அனுப்பிப் பின் உத்தரமீமாம்ஸையாகிய அத்வைதத்தைத் தாபிக்க, நான்கு வேதங்களும் மூர்த்திகரித்த தொப்ப, பதுமபாதர், ஹஸ்தாமலகர், துரோடகர், வார்த்திககாரரென்னும் நால்வரோடு ஸ்ரீ சங்கர பகவத்பாதரென்னும் பெயரோடவதரித்து துர்மதங்களே எல்லாவற்றையும் துவ்ஸம்பண்ணி சுவமதஸ்தாபனத்தால் அத்வைதஸ்தாபனசாரியர், வியாக்கியான சிம்ஹாசனதீசரென்னும் பெயர்களேயும் பூண்டருளினர் அம்மகான் இயற்றியருளிய நூல்கள் பலவற்றுள், சிலவற்றை யெமதாசிரியராகிய ஸ்ரீ பிரஹ்மநிஷ்ட பண்டித வே. குப்புஸ்வாமி ராஜு அவர்கள் ஆரியபாடையுணராத தமிழ்நாட்டு ஆஸ்திகர்களாகிய மந்தாதிகாரிகளுக்குமுபயோகமாவான்கருதி. உஎ. புத்தகங்களே தமிழில் மொழிபெயர்த்தருளினர். அவற்றை யாம் மூலசுலோகங்களோடு கூட்டிச் சங்கரகிரந்தாவலி மூன்றும் புத்தகமாக வெளிப்படுத்தினேம். இதிலுள்ள குற்றங்களேப் பெரியோர் மன்னிக்க.

ராம. வீராஸ்வாமி ராஜு.

## இதிலடங்கியுள்ளன.

॥ ॐ तत् सत् ॥

# ॥ पंचीकरणम् ॥

# பஞ்சீகரணம்

## வார்த்திகத்துடன்.



பஞ்சீகரணம்.

अथातः परमहंसानां समाधिविधिं व्याख्यास्यामः ॥

இப்போது அதனால் பரமஹம்ஸர்களின் சமாதிவிதியை வியாக்கியானஞ்செய்வாம்:—

வார்த்திகம்.

ॐकारः सर्ववेदानां सारस्तत्त्वप्रकाशकः ।
तेन चित्तसमाधानं मुमुक्षूणां प्रकाश्यते ॥ १ ॥

ஓங்காரம் சர்வவேதங்களின் சாரமும் தத்துவப்பிரகாசமுமாம். அதனால் முமுக்ஷுக்களின் சித்தசமாதானம் பிரகாசிக்கப்படுகின்றது.

பஞ்சீகரணம்.

सच्छब्दवाच्यमविद्याशबलं ब्रह्म। ब्रह्मणोऽव्यक्तम् । अव्यक्तान्महत् । महतोऽहंकारः। अहंकारात्पञ्चतन्मात्राणि। पञ्चतन्मात्रेभ्यः पञ्चमहाभूतानि। पञ्चमहाभूतेभ्योऽखिलं जगत् ॥

சத்தென்னும் சொற்பொருளான அவித்தையோடு கூடியது பிரஹ்மம். பிரஹ்மத்தினின்று அவ்வியக்தமும் (மூலப்பிரகிருதியும்), அவ்வியக்தத்தினின்று மகத்தும், மகத்தினின்று அகங்காரமும், அகங்காரத்தினின்று பஞ்சதன்மாத்திரைகளும், பஞ்சதன்மாத்திரைகளினின்று பஞ்சமகாபூதங்களும், பஞ்சமகாபூதங்களினின்று சகலஜகத்தும் உண்டாயின.

வார்த்திகம்.

आसीदेकं परं ब्रह्म नित्यमुक्तमविक्रियम् ।
तत्स्वमायासमावेशाद्बीजमव्याकृतात्मकम् ॥ २ ॥

* க. நித்தியமுக்தமும் * உ. அவிக்கிரியமும் ஏகமுமான பரப்பிரஹ்ம முளது. அது தனது மாயையில் செவ்வையாய்ப் பிரவேசித்தலால் பீஜமான * ௩. அவ்யாகிருதவடிவினதாகின்றது.

तस्मादाकाशमुत्पन्नं शब्दतन्मात्ररूपकम् ।
स्पर्शात्मकस्ततो वायुस्तेजो रूपात्मकं ततः ॥ ३ ॥

அதனினின்றும் சப்ததன்மாத்திரவடிவ ஆகாசமுண்டாயிற்று. அதனினின்றும் ஸ்பரிசவடிவ வாயு உண்டாயிற்று. அதனினின்றும் ரூபவடிவ தேயு (அக்கினி) உண்டாயிற்று. (௩)

आपो रसात्मिकास्तस्मात्तेभ्यो गन्धात्मिका मही ।
शब्दैकगुणमाकाशं शब्दस्पर्शगुणो मरुत् ॥ ४ ॥

அதனினின்றும் இரஸவடிவ ஜல முண்டாயிற்று. அதனினின்றும் கந்தவடிவ பிருதிவி உண்டாயிற்று. சப்தமொன்றையே குணமாகவுடையது ஆகாயம். சப்த, ஸ்பரிசங்களை குணமாகவுடையது வாயு. (ச)

शब्दस्पर्शरूपगुणैस्त्रिगुणं तेज उच्यते ।
शब्दस्पर्शरूपरसगुणैरापश्चतुर्गुणाः ॥ ५ ॥

சப்தம் ஸ்பரிசம் ரூபம் என்னும் குணங்களால் முக்குணமுடையது தேயு எனப்படும். சப்தம், ஸ்பரிசம், ரூபம், இரஸமென்னும் குணங்களால் நாற்குணமுடையது ஜலம். (ரு)

---

* க. நித்தியமுக்த மென்பதனை ஸ்ரீபாலபோதம் கூ-வது உபதேசம் உகூஅ-வது பக்கத்திலும், அபரோக்ஷாநுபூதி கக-வது பக்கத்திலும் காண்க.

* உ. அவிக்கிரியம் அதாவது விகாரப்படுத்தப்படாதது

* ௩. அவ்வியாகிருதம் அதாவது விசேஷமாயாக்கப்படாதது.

शब्दस्पर्शरूपरसगन्धैः पञ्चगुणा मही ।
तेभ्यः समभवत्सूत्रं लिङ्गं सर्वात्मकं महत् ॥ ६ ॥

சப்தம், ஸ்பரிசம், ரூபம், இரஸம், கந்த மென்பவற்றால் ஐந்துகுணமுடையது பிருதிவி. அவற்றினின்றும் சூத்திரமும் * ச. சர்வாத்மகமும் மகத்துமான இலிங்கமுண்டாயிற்று. (சு)

ततः स्थूलानि भूतानि पञ्च तेभ्यो विराडभूत् ।
पञ्चीकृतानि भूतानि स्थूलानीत्युच्यते बुधैः ॥ ७ ॥

அதனின்றும் ஸ்தூலமான ஐந்து பூதங்க ளுண்டாயின. அவற்றினின்றும் விராட்டு உண்டாயிற்று. பஞ்சீகிருதபூதங்கள் ஸ்தூலங்க ளென்று அறிஞர்களால் சொல்லப்படும். (எ)

பஞ்சீகரணம்.

पञ्चानां भूतानामेकैकं द्विधा विभज्य स्वार्द्धभागं विहायार्द्धभागं चतुर्धा विभज्येतरेषु योजिते पञ्चीकरणं मायारूपदर्शनमध्यारोपापवादाभ्यां निष्प्रपञ्चं प्रपंच्यते ।

ஐந்துபூதங்களுள் ஒவ்வொன்றனையும் இரண்டிரண்டாகப் பிரித்து, தனது பாதிபாகத்தினை விட்டுப், பாதிபாகத்தினை நான்காகப் பிரித்து மற்றப் பூதங்களில் சேர்க்கப் பஞ்சீகரணமாம். இது மாயாரூபதரிசனம். அத்தியாரோபாபவாதங்களால் பிரபஞ்சமில்லாதது பிரபஞ்சமாக்கப்படுகின்றது. (பிரபஞ்சம்=விரிவு.)

வார்த்திகம்.

पृथिव्यादीनि भूतानि प्रत्येकं विभजेद्द्विधा ।
एकैकं भागमादाय चतुर्धा विभजेत्पुनः ॥ ८ ॥

பிருதிவிமுதலிய பூதங்களை ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகப் பிரிக்கவேண்டும். அவற்றுள், ஒவ்வொருபாகத்தை மறுபடியும் நந்நான்காகப் பிரிக்கவேண்டும். (அ)

---

* ச. மற்ற காரியங்கள் யாவும் இதன் பரிணாமமாகலின் இதனைச் சர்வாத்மக மென்றார்.

एकैकं भागमेकस्मिन्भूते संवेशयेत्क्रमात् ।
ततश्चाकाशभूतस्य भागाः पञ्च भवन्ति हि ॥ ९ ॥

அவற்றுள், ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பூதத்தில் கிரமமாகச் சேர்த்தல் வேண்டும். அதனால், ஆகாசபூதத்தின் பாகங்கள் ஐந்தும், (கூ)

वाय्वादिभागाश्चत्वारो वाय्वादिष्वेवमादिशेत् ।
पञ्चीकरणमेतत्स्यादित्याहुस्तत्त्ववेदिनः ॥ १० ॥

வாயுவாதிகளின் பாகம் நான்குமாகின்றன. இவ்வாறே, வாயுவாதிகளிலும் பொருத்துக. இது * ங. பஞ்சீகரண மாகுமென்று தத்துவ முணர்ந்தவர் கூறுவர். (க0)

பஞ்சீகரணம்.

ॐ पञ्चीकृतपञ्चमहाभूतानि तत्कार्यं सर्वं विराडित्युच्यते । एतत्स्थूलशरीरमात्मनः ।

ஓம். * சு. பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களும் அவற்றின் காரியமுமாகிய யாவும் விராட் டென்று சொல்லப்படுகின்றன. இது ஆத்மாவுக்கு ஸ்தூலசரீரம்.

வார்த்திகம்.

पञ्चीकृतानि भूतानि तत्कार्यं च विराड्भवेत् ।
स्थूलं शरीरमेतत्स्यादशरीरस्य चात्मनः ॥ ११ ॥

பஞ்சீகிருதபூதங்களும் அவற்றின் காரியமும் விராட்டு ஆகின்றது. இஃது சரீரமின்றிய ஆத்மாவுக்கு ஸ்தூலசரீர மாகின்றது. (கக)

---

* ங. பஞ்சீகரண மென்பதனை பைங்கலோபநிடதம் உ-வது அத்தியாயத்திலும், ஸ்ரீவிசாரசந்திரோதயம் ள-வது பக்கத்திலும், ஸ்ரீ பாலபோதம் மூன்றும் உபதேசம் ஙக-வது பக்கத்திலும் காண்க.

* சு. எந்தப்பூதங்களுக்குப் பஞ்சீகாணம் (அவ்வைந்தாக்கல்) செய்யப்பட்டதோ அவற்றைப் பஞ்சீகிருதபூத மென்பர். அவற்றையே ஸ்தூலபூத மென்றுங் கூறுவர்.

अधिदैवतमध्यात्ममाधिभूतमिति त्रिधा ।
एकं ब्रह्म विभागेन भ्रमाद्भाति न तत्त्वतः ॥ १२ ॥

ஒரே பிரஹ்மம் பிரமத்தால் அதிதைவம் அத்தியாத்மம் அதிபூதமென்று மூவகைப் பிரிவாகத் தோற்றுகின்றது; உண்மையாக இல்லை. (கஉ)

பஞ்சீகாணம்.

इन्द्रियैरर्थोपलब्धिर्जागरितम् । एतदुभयाभिमान्यात्मा विश्वः । एतत्त्रयमकारः ।

இந்திரியங்களால் பொருளுணர்ச்சியுண்டாதல் ஜாக்கிரம். இவ்விரண்டன் அபிமானி ஆத்மா விசுவன். இம்மூன்றும் அகாரம்.

வார்த்திகம்.

इन्द्रियैरर्थविज्ञानं देवतानुग्रहान्वितैः ।
शब्दादिविषयं ज्ञानं तज्जागरितमुच्यते ॥ १३ ॥

தேவதாநுக்கிரகத்தோடு கூடிய இந்திரியங்களால் அர்த்தவிஞ்ஞானம் (பொருளுணர்ச்சி) உண்டாகின்றது. சப்தாதிகளை விஷயஞ்செய்யும் ஞானமாகிய அது ஜாக்கிர மெனப்படும். (கங)

श्रोत्रमध्यात्ममित्युक्तं श्रोतव्यं शब्दलक्षणम् ।
अधिभूतं तदित्युक्तं दिशस्तत्राधिदैवतम् ॥ १४ ॥

சுரோத்திரம் (காது) * எ. அத்தியாத்ம மெனப்படும் கேட்கப்படுவதான சப்தலக்ஷணம் அதிபூதம் எனப்படும். அதில் திக்கு அதிதைவத மெனப்படும். (கச)

त्वगध्यात्ममिति प्रोक्तं स्प्रष्टव्यं स्पर्शलक्षणम् ।
अधிभूतं तदित्युक्तं वायुस्तत्राधिदैवतम् ॥ १५ ॥

* எ. அத்தியாத்மமுதலியவற்றின் இலக்கணத்தினை ஸ்ரீ விசாரசந்திரோதயம் கoஎ-வது பக்கத்திற் காண்க.

துவக்கு (தோல்) அத்தியாத்ம மெனப்படும். ஸ்பரிசிக்கப் படும் ஸ்பரிசலக்ஷணம் அதிபூதமெனப்படும். அதில் வாயு அதி தைவதமாம். (கரு)

चक्षुरध्यात्ममित्युक्तं द्रष्टव्यं रूपलक्षणम् ।
अधिभूतं तदित्युक्तमादित्योऽत्राधिदैवतम् ॥ १६ ॥

சக்ஷு (நேத்திரம்) அத்தியாத்ம மெனப்படும். பார்க்கப் படும் ரூபலக்ஷணம் அதிபூத மெனப்படும். இதில் ஆதித்தியன் அதிதைவதமாம். (கசா)

जिह्वाध्यात्मं तया स्वाद्यमधिभूतं रसात्मकम् ।
वरुणो देवता तत्र जिह्वायामधिदैवतम् ॥ १७ ॥

சிங்ஙுவை (நா) அத்தியாத்மம். அதனுல் உருசிக்கப்படும் இரஸவடிவினது அதிபூதம். அந்த நாவில் வருணனுகிய தேவ தை அதிதைவதமாம். (கஎ)

घ्राणमध्यात्ममित्युक्तं घ्रातव्यं गन्धलक्षणम् ।
अधिभूतं तदित्युक्तमश्विनावधिदैवतम् ॥ १८ ॥

கிராணம் (மூக்கு) அத்தியாத்ம மெனப்படும். முகரப்படும் கந்தலக்ஷணம் அதிபூத மெனப்படும். அதில் அசுவினிகுமார ரிருவரும் அதிதைவதமாம். (கஅ)

वागध्यात्ममिति प्रोक्तं वक्तव्यं शब्दलक्षणम् ।
अधिभूतं तदित्युक्तमग्निस्तत्राधिदैवतम् ॥ १९ ॥

வாக்கு அத்தியாத்ம மெனப்படும். வசனிக்கப்படும் சப்த லக்ஷணம் அதிபூத மெனப்படும். அக்கினி அதில் அதிதைவத மாம். (ககூ)

हस्तावध्यात्ममित्युक्तमादातव्यं च यद्भवेत् ।
अधिभूतं तदित्युक्तमिन्द्रस्तत्राधिदैवतम् ॥ २० ॥

